# ஆனந்தபோதினி

## 10-ம் வருடத்திய அட்டவணை.


| விஷயங்கள். | பக்கங்கள் |
|---|---|
| கடவுள் வணக்கம் ... | 1, 41, 81, 121, 161, 201, 241, 281, 321, 361, 401, 441 |
| நமது புதுவருடம் ... | 4 |
| மிருகபலமும் ஆன்ம சக்தியும் ... | 6 |
| இந்தியாவில் பிச்சைக்காரர் ... | 13 |
| கை இராட்டினம் ... | 17 |
| பிறமதம் புகுதலும் மததூஷணையும் ... | 44 |
| அம்மையின் பெருமை ... | 53 |
| ஆனந்தனைப் பற்றிய அனுபவமும் ஓர் யோசனையும் ... | 54 |
| நமக்கு சோப் அவசியமா ? ... | 63 |
| நம் தாய்நாடு எப்போது க்ஷேமமுறும் ... | 84 |
| ஹிந்து மகம்மதிய சம்பந்தம் ... | 93 |
| **ஆரியசித்தாந்தம்** | |
| **தெய்வம்**—பக்தியோகம் ... | 20 |
| மானசயோகம் ... | 56, 99 |
| ஞானயோகம் ... | 137 |
| கர்மவிபாகம் ... | 183, 218 |
| சர்வசக்தி ... | 269, 298, 345 |
| சத்தியம் ... | 389 |
| ஆசாரம் ... | 428, 458 |
| **ஹிந்து மத சித்தாந்தங்கள்** ... | 132 |
| **பகவத் கீதை வசனம்** ... | 33, 73, 109, 151, 193, 233, 273, 309, 349, 386, 433, 473 |

| விஷயங்கள். | | பக்கங்கள். |
|---|---|---|
| நவீன நாகரீகத் தீங்கு | ... | 130 |
| மகாத்மா காந்தியவர்கள் கூறிய அரிய விஷயம் | ... | 24, 60 |
| சற்சன சங்கம் | ... | 141 |
| மெய்யான சமயம் எது? பொய்யான சமயம் எது ? | ... | 65 |
| ஒரு வேண்டுகோள் | ... | 35 |
| தொழில் | ... | 124 |
| நாலடியார் வசனம் | ... | 68, 112, 135, 172, 222, 266, 342, 383 |
| பூர்வீக இந்தியாவில் சுருக்கெழுத்து | ... | 71 |
| சமீபத்தில் நேர்ந்த பெருவெள்ளம் | ... | 102 |
| சந்தாநேயர்களுக்கு விசேஷ அறிவிப்பு | ... | 38, 436 |
| மோக்ஷத்திற்கு நான் போனால் போகலாம் | ... | 204 |
| அன்பு | ... | 178 |
| புராதன இந்திய சோப் பவுடர் | ... | 134 |
| மேல்நாட்டு நாகரீகம் | ... | 145 |
| ஓர் கடிதம் | ... | 146, 217, 352 |
| ஓர் அறிவிப்பு | ... | 155, 236 |
| ஆனந்தபோதினி ஏஜண்டுகள் | ... | 155 |
| சிந்தனையும் செயலும் | ... | 164 |
| நொறுங்கத்தின்றால் நூறிலும் சாவில்லை. | | 186 |
| குடம்பை எனும் சொற்பொருள் விளக்கம் | ... | 188 |
| கல்வி | ... | 209, 285 |
| உயிர்வதை நீத்தல் விழா | ... | 229 |
| ஓர் முக்கிய விளம்பரம் | ... | 235 |
| நம்நாடும் பத்திரிகைகளும் | ... | 344 |
| தமிழர் விவாகச் சடங்கு | ... | 150 |
| ஔவைப்பிராட்டியாரையும் திருத்த முன்வந்துவிட்டார்களா? | ... | 255 |
| ஞானமும் ஞானமார்க்கமும் | ... | 257 |
| ஆன்ம ஈடேற்றம் | ... | 261 |
| பத்திரிகையும் வியாசமெழுதுவோரும் | ... | 289 |

| விஷயங்கள். | பக்கங்கள். |
|---|---|
| ஹிந்துக்கள் (மிக முக்கியமாய் சைவ சமயிகள்) கவனிக்கவேண்டிவை ... | 291 |
| தேகப் பயிற்சி ... | 295 |
| அவமரியாதையான வழக்கங்கள் ... | 301 |
| ஓர் சந்தேகம் ... | 303 |
| நமது அநுதாபம் ... | 313 |
| எனது அநுதாபம் ... | 313 |
| இரங்கற் பாக்கள் ... | 314 |
| உயிரினுஞ் சிறந்ததெது ? ... | 323 |
| விவசாயம் ... | 327 |
| நம்மவர் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயம் ... | 331 |
| பஞ்சாங்க சந்தேக நிவர்த்தி ... | 335 |
| சுகவழி 80 ... | 340 |
| சாதன சதுஷ்டயம் ... | 353 |
| கைத்தொழிலின் கௌரவம் ... | 364 |
| தமிழருந்தமிழும் ... | 367 |
| ஒற்றுமையினுயர்வு ... | 371 |
| இஸ்லாத்தின் உண்மை ... | 372 |
| குரோதன வருஷப்பிறப்பு ... | 379 |
| ஓர் ஐயவினா ... | 393 |
| தமிழ் ... | 393 |
| **சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு** ... | 396 |
| சமாதானமே சுகவாழ்வு ... | 403 |
| ஆரம்ப ஆசிரியர்கள் ... | 411 |
| அகம்புறக் காட்சி விளக்கம் ... | 413, 448 |
| நாரதரும் 60 பிள்ளைகளும் ... | 417 |
| தொல்காப்பியப் பொருளதிகாரம ... | 424 |
| வானமுந் தானமும் ... | 444 |
| கண்சிறந்ததா ? காது சிறந்ததா ? ... | 455 |
| உன்னை நேசி ... | 463 |
| தாசிகளின் முற்கால தற்கால நிலைமை... | 466 |
| சுருட்டு சிகரெட் ... | 470 |
| வினா ... | 472 |

| விஷயங்கள். | பக்கங்கள். |
|---|---|
| பெண்கள் பக்கம் :— | |
| மாதர் நீதிமஞ்சரி ... | 113, 148, 175, 304, 336, 375, 421 |
| தற்கால பெண்கல்வி ... | 225 |
| தற்கால கற்புக்கரசியின் உண்மைச் சரிதை. ... | 253 |
| மாணவர் பக்கம்:— | |
| மாணவரும் சுருட்டும் ... | 169 |
| நாவல்:— | |
| அம்பாலிகை அல்லது அதிசய மரணம் ... | 36, 76, 117, 156, 196, 236, 275, 315, 355, 398, 437, 476 |
| போதுச் சமாச்சாரங்கள் ... | 39, 79, 119, 159, 199, 239, 279, 319, 359, 399, 439, 479 |
| பஞ்சாங்கம் ... | 40, 80, 120, 160, 200, 240, 280, 320, 360, 400, 440, 480 |

# ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சருடைய
# சரித்திரமும் உபதேசங்களும்.

சில வருஷங்களுக்கு முன்னர் கல்கத்தாவிலே ஞானமேதிரண்டு ஓர்
உருவெடுத்தாற்போன்று தோன்றி, சகலவேதாந்த சாஸ்திரக் கருத்துக்க
ளையும் ஓதாதுணர்ந்து, அறியாப்பருவத்திலேயே உலகப்பற்றுக்களைத்
துறந்து, அரிய அற்புதங்களை யெல்லாம் செய்து பேரின்பத்தை யடைந்த
மகாத்மாவாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரை உலகத்தில் பெரும்பான்
மையும் எல்லோரு மறிவர். அமெரிக்கா, ஐரோப்பா முதலிய அன்னிய
நாடுகளுக்கும் சென்று, ஆங்காங்கே, 'இந்துமததமே அழிவற்றமதம்' என்று
அனைவரும் பிரமிக்கப் பிரசங்கங்கள் புரிந்து, இந்து மதக் கொள்கைகளை
யெல்லாம் ஆங்காங்குள்ள பலர் மனதிலும் புகுவித்து, அவர்களிற் பலரை
இந்து மதத்தில் சேர்த்து, திக்கு விஜயம் செய்து வந்த ஞான சிம்ஹமாகிய
ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளுக்கும் இந்த இராமகிருஷ்ணரே ஞானாசிரி
யர். இங்ஙனம் அவர்க்கும் இவர் குருவாயிருந்தனரென்றால் இவருடைய
மகிமை அளவிடற்கரிதா மென்பதைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? இவ
ருடைய துறவைப்பற்றிய சரித்திரமோ மிகவும் அற்புதமானது. இவருக்
குத் தெரியாமல், இவருடைய தேகத்திலே ஒரு நாணயத்தைக்கொண்டு
எவரேனும் தொட்டால், அந்தப் பண விஷயத்தில் அருவருப்புக்கொண்டு
இவர் உடம்பு அப்பொழுதே துடிக்குமாம். இஃதொன்றினாலேயே இவ
ரது மனத் தூய்மையை நன்குணரலாம். இன்னும் இவர் செய்த அற்புதச்
செயல்கள் எத்தனையோ உண்டு. இவர்கள் நன்றாக எழுதப் படிக்கத்
தெரியாதவரா யிருந்தும் உயர்ந்த ஞானமார்க்கத்தை புணர்ந்து தாம்
அனுஷ்டித்ததோடு தம் சிஷ்யர்களுக்கும் எளிதில் விளங்கும்படி தக்க
உதாரணங்களோடு அதனைப் பற்பலவிதமாக உபதேசித்திருக்கின்றார்.
அவையெல்லாம் பக்தி, ஞானம், மோக்ஷம் முதலிய பெரிய விஷயங்களை
யெல்லாம் சுலபமாக விளக்கிக் காட்டக்கூடியவைகள். அவற்றைப் பார்ப்
போரும் கேட்போரும் அறிவற்ற பேதைகளா யிருந்தாலும், நாஸ்திகரா
யிருந்தாலும் தங்கள் மடமை நீங்கி உடனே ஞானமார்க்கத்திற் பிரவே
சித்து நற்கதியடைவார்களென்பதில் சந்தேகமேயில்லை. மேல்நாட்டு ஜட
நாகரீகமானது வளர்ந்து எங்கும் பரவி ஈசுவர பக்தியும், ஞானமும்
குறைந்துவரும் இக்கொடிய கலிகாலத்தில் இத்தகைய ஓர் அவதார புரு
ஷர் தோன்றி, பிரபஞ்ச மயக்கம் அதிகரிப்பதற் கனுகூலமாகப் பெருகி
வரும் பற்பல நூதன வஸ்துக்களிலும், விஷயங்களிலும் சிந்தை செலுத்
தாது, சர்வ சங்க பரித்தியாகஞ் செய்து ஞான வொளியை எங்கும் பரப்
பியது மகா ஆச்சரியமென்பதை எவருமறிவர்.

ஆதலின், இத்தகைய மகானுடைய அற்புத சரித்திரங்களையும், நித்திய
ஞானோபதேச மொழிகளையும் தமிழில் ஒரு புத்தகமாக்கி வெளியிட்டால்
தமிழ் நாட்டார்க்குப் பெரிதும் பயன்படுமென்று கருதி, அன்னிய பாஷை
களிலிருந்த அவற்றை, சிறந்த வித்வான்களைக்கொண்டு மொழிபெயர்ப்பித்
து, தமிழ் வித்வான்களால் இலக்கணப் பிழையின்றி நன்கு பரிசோதிக்கச்
செய்து, 'ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சருடைய சரித்திரமும், உபதேசங்களும்'
என்ற பெயருள்ள புத்தகமாக்கி, உயர்ந்த கடிதத்தில் பிழையின்றி அச்சி
ட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றோம். இப் புத்தகம் கிரவுன் 16-ல் 368 பக்
கங்களுக் கதிகமுள்ளதாக அச்சிட்டு உயர்ந்த காலிகோ பைண்டும் செய்
யப்பட்டிருக்கிறது. 80 பக்கம் வரையில் ஸ்ரீராமகிருஷ்ணருடைய சரித்தி
ரம் அடங்கியிருக்கின்றது; அதற்குமேல் முடிவுவரை 600-க்கு மேற்பட்ட

உபதேச மொழிகள் அடங்கியிருக்கின்றன. சரித்திரத்தில் ஸ்ரீராமகிருஷ்ணர் தோன்றியது முதல் சமாதியடைந்த வரையில் நடந்த விருத்தாந்தங்களெல்லாம் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றன. விலை ரூ. 1-12-0.

---

# MATERIA MEDICA

## தமிழ் மெடீரியா மெடிகா என்னும்

### அருமையான வைத்திய நூல்.

இவ்வரிய பெரிய வைத்திய புஸ்தகமானது ஆங்கில மருந்து கலப்பு விவர முறைகளைத் தமிழில் மிகவும் விளக்கமாக உள்ளங்கை நெல்லிக்கனி போல் நன்கு விளக்குகின்றது. இன்னின்ன நோய்க்கு இன்னின்ன விதமாக மருந்துகளைச் சேர்த்து மிக்சர் (Mixture) முதலானவை செய்து சாப்பிடவேண்டுமென்பதை இந்நூல் நன்றாகக் கூறுகின்றமையால் இதை ஓர் 'ஆபத்துக்குதவும் தோழன்' என்று அனைவோரும் நம்பலாம். வைத்திய அனுபவம் மிகப் பெரிதும் உடைய ஒருவரால் எழுதப்பட்டது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கூடியவரையில் நோய்களுக்குப் பரிகாரம் செய்துகொள்ளவும் இந்நூல் மிகவும் உபயோகப்படும். வைத்தியர்கள் கிடைக்காத சந்தர்ப்பங்களிலும் வைத்தியர்களில்லாத ஊர்களிலும் இப்புத்தகம் மிகவும் அவசியமானது. ஆகவே, ஆபத்துக்குதவும் சஞ்சீவி போன்ற இவ் வைத்திய புத்தகம், ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருந்தே தீரவேண்டுமென்பது நாம் சொல்லாமலே விளங்கும். இதில் குறித்துள்ள மருந்து முறைகளைத் தக்கபடி கையாளுவதனால், எல்லாநோய்களும் நீங்குமென்பது நிச்சயம். இதன் விலை ரூபா 8.

**இது, ஒவ்வொரு வைத்தியரிடத்திலும் அவசியமாய் இருக்கவேண்டியது.**

## பவளத்தீவு அல்லது குடும்பசாபம்.

நமது மனமோகினி சஞ்சிகையில் பிரதி மாதமும்வெளியாகிக்கொண்டிருந்த மேற்படி நாவலின் 2-பாகமும் (நமது சந்தா நேயர்களின் கோரிக்கையின்படி)புத்தக ரூபமாக வெளியிடப்பட்டிருக்கின்றன. இக்கதையில் ஒரு செல்வச சீமான் பேராசையால் செய்யும் குற்றத்திற்காக அவன் சந்ததியார் கொடிய சாபத்தை யனுபவிப்பது யாவர்க்கும் மேலான படிப்பினையைக் கற்பிக்கும். இதில் வரும் ஒவ்வொரு ஆசாமியின் சரித்திரமும் அவரவர் தத்தமது நடக்கைகளுக்குத் தக்க பலனை முடிவில் அடைவதும், ஒவ்வொரு நேர்த்தியான நீதியைப் போதிக்கும். 2-பாகமும் ரூபா 3-0-0.

## க ற் கோ ட் டை.

இந்த நாவல் ஆரம்பத்திலேயே வாசிப்போர் மனதைப் பூரணமாய்க் கவர்ந்து கொள்வதோடு முடியுமட்டும் அக்கவர்ச்சி நீங்காது. இது சரித்திர சம்பந்தமான நாவல் எனலாம். சில ஸ்திரீகளின் அற்புத நடக்கைகளும், துணிகரமான தீரச்செயல்களும், தம் காதலரிடத்தில் மெய்க்காதல் கொண்ட உத்தம ஸ்திரீகள் தம்காதலர் பொருட்டாய், எவ்வளவு வரையில் ஆடவருக்குச் சமமாய் நடந்துகொள்ளச்சக்தியுடையவர்களா யிருக்கிறார்களென்பதை நன்கு விளக்கும். நீதியைப் புகட்டும் ஓர் உயர்ந்த நூல். இதில் நூலாசிரியர் திருவுருவப் படமும் அமைக்கப்பட்டிருக்கிறது.ரூபா 2.

---

விலாசம்:-ஆனந்தபோதினி ஆபீஸ், தபால்பெட்டி நே. 167, மதராஸ்.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி | இரக்தாட்சி ௵ ஆடி ௴ ௧௳ | பகுதி |
| 10 | 1924௵ ஜூலை ௴ 16௳ | 1 |

## கடவுள் வணக்கம்.

கல்லேனு மையவொரு காலத்தி லுருகுமென்
  கன்னெஞ்ச முருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையு நான்முகன்
  கற்பிக்க வொருகட வுளோ
வல்லான் வகுத்ததே வாய்க்கா லெனும்பெரு
  வழக்குக் கிழுக்கு முண்டோ
வானமாய் நின்றின்ப மழையா யிறங்கியெனை
  வாழ்விப்ப துன்பரங் காண்
பொல்லாத சேயெனிற் றாய்தள்ளல் நீதமோ
  புகலிடம் பிறிது முண்டோ
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
  புன்மையே னுவ னந்தோ
சொல்லான் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
  சும்மா விருக்க வருள்வாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
  சோதியே சுகவா ரியே. (1)

---

நீங்கா துயிருக் குயிராகி நின்ற நினையறிந்தே
தூங்காமற் றூங்கி னல்லாதே யெனக்குச் சுகமுமுண்டோ
வோங்கார மாமைந் தெழுத்தாற் புவனத்தை யுண்டுபண்ணிப்
பாங்கா நடத்தும் பொருளே யகண்ட பரசிவமே. (2)

---

பொய்யா ருலக நிலையல்ல கானற் புனலெனவே
மெய்யா வறிந்தென்ன வென்னு லிதனை விடப்படுமோ
கையான் மௌனந் தெரிந்தே கல்லானிழற் கண்ணிருந்த
வையா வப்பா வென்னரசே முக்கணுடை யாரமுதே. (3)

---

## அரும்பொருள் விளக்கம்.

1. ஐய=என் ஐயனே.

"வல்லான் வகுத்ததே வாய்க்கால்"—இது ஒரு பழமொழி.

"வல்லமையுடையவன் வைத்ததே சட்டம்" என்பது இதன் கருத்து. பொல்லாத சேய்=துஷ்டனாகிய புத்திரன்.

கருங்கல்லும், எரிமலையிலுண்டாகும் தீயின் அதி உஷ்ணம் போன்ற சூட்டினால் உருகிவிடுகிறது. ஆகையால் "கல்லேனுமொரு காலத்திலுருகும் ஆனால் கடின சித்தமாகிய என் மனம் கரையவில்லையே" என்றார்.

மனதினிடத்திலுள்ள கடினத்தன்மை இயற்கையானதல்ல. முன் சன்மங்களின் கெட்ட கர்மபலத்தாலேயே கடினம், பொறாமை, சினம் முதலிய தீய குணங்கள் மனதினிடம் சேர்ந்தன. மனதின் இயற்கைக் குணம் சத்துவமே. இரசோ தமோ குணங்கள் வந்து கலந்தவையாதலின் அவற்றை நீக்கிவிடலாகும்.

"மனதுசத் துவசொரூபம் மற்றிரண்டும் வந்து கலந்தன
வவற்றை மாற்றினாற் போம்
* * * * " (கைவல்யம்)

ஆகையால் "தமது கருணைக்கு இணங்காத கடினத்தன்மையை பிரம்மா எங்கேனும் உண்டாக்கக்கூடியவரோ! இல்லை. தாங்கள் சர்வ வல்லமையுடையவர். "வல்லான் வகுத்ததே வாய்க்கால்" என்பதுபோல் தாங்கள் கருதினால் என் மனதைக் கரையும்படிச் செய்யலாம். (மனங் கரைந்தாலன்றி ஆனந்தம் ஜனியாது ஆதலின்) என் மனம் கரையச்செய்து எனக்கு ஆனந்தானுபவம் உதிக்குமாறு செய்யவேண்டும். அப்படிச் செய்விப்பது உன்பாரம்" என்றார்.

"பொய்வார்த்தை சொல்லிலோ......புன்மையேன் ஆவனந்தோ"=நான் பொய்கூறின் உனதருள் பெறாதவனாகி அதனால் அற்பனுமாவேன்.

சொல்லான் முழக்கிலோ சுகமில்லை=வாய்ப்பேச்சால் கூறிக்கொண்டிருப்பதால் மட்டும் சுகோதயமுண்டாகாது.

(ஆகையால்) மௌனியாய்ச் சும்மாவிருக்க அருளாய்=பூரணமான மௌன நிலையையடைந்து செயலற்றிருக்குமாறு அருள்புரியவேண்டும்.

நிர்க்குணம்=குணமற்றது.

சுகவாரி=ஆனந்தமாகிய கடல்.

2. உயிருக்குயிராகி நீங்காது நின்ற நினையறிந்து=இம்மையிலும் மறுமையிலும் இடைவிடாது என் உயிருக்குயிராயிருக்கும் பரமான்மாவாகிய உன்னை யுள்ளபடி யறிந்து.

பரமேசுவரன் எப்போதும் நமக்குள்ளாகவே அறிவிற்கறிவாய் இரு

ந்து யாவற்றையும் செய்விக்கிறான். அவனையன்றி நாம் இல்லை. ஊட்டு விப்பானும், உறங்குவிப்பானும், ஒன்றோடொன்றைக் கூட்டுவிப்பானும், இருவினைப்பயனாகிய கயிற்றின்வழியே நம்மை யாட்டுவிப்பானும் அவனே யாகும். அஞ்ஞான நிலையில் நாம் அதையுணராது மாயை வழிப்பட்டு அகங்காரத்தால் நாமே சகல கருமங்களையும் செய்வதாகவும் அவற்றின் பயனை யனுபவிப்பதாகவும் மயங்கி யிடர்ப்படுகிறோம்.

பலஜன்மங்களில் செய்த சத்கருமங்களின் பயனால் ஈசுவரனருள் பெற்று ஆணவமாகிய மாயை விலக்கப்பட்டபோது, நமது ஆன்மசொரூபம் இன்னதென உணர்ந்து பரமான்மாவையுமுணரும் பக்குவமடைகிறோம்.

" தூங்காமல் தூங்கி " என்பது சாக்கிரத்தில் சுழுத்தி.

சாதாரணமான நித்திரையில் கருவிகரணங்களியாவும் ஒடுங்கி யிருப்ப தாலேயே சுகமிருக்கிறது. ஆனால் இத்தூக்கத்தில் ஆன்மாவோடு அஞ் ஞானம் மட்டும் இருக்கிறது, ஆகையால் இது அஞ்ஞானத் தூக்கம். தூங் காமல் தூங்கும் நிலையாகிய ஞானதூக்கத்தில் கருவிகரணங்களெல்லாம் ஒடுங்கிவிடுவதோடு அஞ்ஞானமும் நசித்துவிடுகிறது. இதுவே " பரமா னந்த நித்திரை " யென்பதும்.

ஆன்மா தன்னையறிந்து தலைவனிற் கலத்தலாகிய "பிரம்மான்ம ஐக்கிய நிலை"யை யடைந்தாலன்றி ஆனந்தம் உதியாது. ஆதலின் "நினையறிந்து தூங்காமற் தூங்கினல்லாதே எனக்குச் சுகமுமுண்டோ " என்றார்.

" ஓங்காரமாகிய ஐந்தெழுத்து"—'ஓம்' என்ற பிரணவமந்திரத்தில் ஐந்தெழுத்துக ளடங்கியிருக்கின்றன. அவை 'அ'காரம், 'உ'காரம், 'ம'கா ரம், அர்த்தமாத்திரை, "அ" என்ற மாத்திரை. இந்த ஐந்தெழுத்துக்களே சி-வ-ய-ந-ம என்ற பஞ்சக்கரமும்.

இப்பிரணவாக்கரத்தில் சத்தம் உண்டாகும் மூலமும் அதன் முடி வும் அடங்கியிருக்கின்றன. அதனால் இப்பிரணவமே எல்லா மந்திரங்களுக் கும் உயிராகும். பிரணவம் முதலில் சேர்க்கப்படாத எம்மந்திரமும் உயி ரற்ற உடல்போல் பயன்படாது. பஞ்சாக்கரம் பிரணவமேயாதலின் அதைமட்டும் பிரணவம் சேர்க்காமலே யுச்சரிக்கலாம். பிரணவத்தின் ஐந்தெழுத்துகளினின்றும் பஞ்சபூதங்களும், பஞ்சபூதங்களினின்றும் தநு கரண புவனபோகமாகிய சகலப் பிரபஞ்சங்களுமுற்பத்தியாயின. "சத்தம் பிறந்திடமே சகல கலையும் பிறக்கும்" என்றனர் வள்ளலார்.

3. பொய்யார்=பொய்நிறைந்த.

கானல் புனல்=கோடைகாலத்தில் ஊஷரபூமியில் கானல் ஜலம்போல் தோற்றுவது. இது பொய்த்தோற்றம்.

பிரம்ம சொரூபத்தினிடத்தில் ஆரோபத்தால் தோன்றும் இப்பிர பஞ்சம் கானல்நீர், கிளிஞ்சிலில் தோன்றும் வெள்ளி, கனவில் தோன்றும்

உலகம் முதலியவைகளுக்கு ஒப்பிடப்பட்டிருக்கிறது. அஞ்ஞான நிலையில் மெய்போல் தோன்றும் உலகம் ஞானோதயமடைந்ததே அனுபவத்தில் அசத்தாய்ச் சடமாய்ப் பொய்யாய்த் தோன்றிவிடும். ஆனால் சாத்திர ஆராய்ச்சியால் இந்த உண்மையை யறிவதால் (பரோட்சஞானத்தால்) மட்டும் உலகில் பற்று ஒழிந்துவிடாது. ஆன்மாவின் நிஜசொரூபத்தைத் தரிசித்தால்தான் ஆன்மாவையன்றி நாமரூபத்தோற்றமான சகலமும் அசத்து ஜடம் என்றும் அவை தனக்கன்னியம் என்றும் தோன்றி, அவற்றிலுள்ள பற்று அடியோடொழியும். ஆதலின் இவ்வுலகப்பற்றொழிதல் மிக்க கஷ்டம். அதனாலே "உலகம் நிலையல்ல கானற்புனலெனவே மெய்யாவறிந் தென்ன வென்னாலிதனை விடப்படுமோ" என்றார்.

பட்டினத்தடிகளும் "விடப்படுமோ விப்பிரபஞ்ச வாழ்க்கையை விட்டுமனம் திடப்படுமோ * * " என்றருளினர்.

கையால் மௌனம் தெரிந்தே=சின்முத்திரைக் கரத்தால் மோனநிலையைக் காட்டியருளி.

கல்லால் நிழல்=கல்லால விருட்சத்தினடியில்.

"கையான்மௌனம்.........முக்கணுடையாரமுதே"

என்றது தக்ஷிணாமூர்த்தியைக் குறிக்கிறது. அந்த நிலை உலகப்பற்று முழுமையு மற்றநிலை யாதலின், அந்நிலை வரவேண்டுமென்று குறிப்பிட தக்ஷிணாமூர்த்தியை நோக்கியே இவ்விஷயத்தைக் கூறினார்.

---

# ஆனந்தபோதினி

## இரக்தாட்சி ஹூ ஆடி மீ கவ

### நமது புது வருடம்.

ஓதற்கரியவனும், உம்பரும் உணரற்கரியவனும், ஆதிமத்தியாந்த ரகிதனும், சச்சிதாநந்த சொரூபியுமாகிய பரமேசுவரனது கிருபையால், நமதானந்தனுக்கு ஒன்பதாண்டுகள் கழிந்து இம்மதி பத்தாம் ஆண்டு தொடங்குகிறது. கடந்த ஒன்பதாண்டுகளாக காகிதம் அச்சுக்கருவிகள் இவைகளின் விலை முதலியவற்றால் பல்வகைக் கஷ்டங்கள் நேரினும் ஆனந்தன் ஒரு மாதமேனும் தடைப்படாது காலக்கிரமப்படி வெளிவருமாறு இன்னருள் புரி

ந்த பண்ணவனும் பரமனை வாழ்த்துவதோடு, ஆனந்தனது அபி விருத்திக்காகச் சிரத்தை யெடுத்துக்கொண்டு இதுகாறும் அதனை யாதரித்துவந்த சந்தா நேயர்களுக்கும், விஷயதானம் புரிந்துத விய கல்விமான்களாகிய நண்பர்களுக்கும், புது சந்ததாரர்களைச் சிபாரிசு செய்து ஆனந்தன் விருத்தியடையுமாறு உதவிய நண்பர்களுக்கும் நன்றியறிதலோடு மனமார்ந்த வந்தனமளிக்கிறோம்.

சில சந்தாநேயர்கள் சஞ்சிகையை மாதமிருமுறையாக்கவேண்டுமென்றும், அதற்காக அதிக சந்தா செலுத்தத் தாங்கள் ஆயத்தமா யிருப்பதாகவும் எழுதியிருக்கிறார்கள். பத்திரிகைகளினால் நாம் அடையத்தக்க பலன்களை யுணர்ந்த இத்தகைய அறிவாளிகள் போதுமானபேர் இருக்கும் பட்சத்தில் நாம் எள்ளளவு இலாபத்தையும் எதிர்பாராமலே சஞ்சிகையை மாதமிருமுறை மிக்க சந்தோஷத்தோடு வெளியிடுவோம். ஆனால் நம் நாட்டாரில் பெரும்பாலார்க்குப் பத்திரிகையிலாவது, தாய்ப்பாஷையிலாவது சரியான அபிமான மில்லையென்று மிக்க விசனிக்கிறோம்.

ஆயினும் இவ்வருடம் போதுமானபேர் சந்தா தொகையை முன்னடி செலுத்தி, ஒவ்வொரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்தால் இப்போதிருக்கும் சந்தாவிற்கே பக்கங்களை யதிகப் படுத்த வெண்ணியிருக்கிறோம் என்று கடந்த மூன்று சஞ்சிகைகளிலும் தெரிவித்திருந்தோம். இதுகாறும் இவ்விஷயத்தில் ஏறக்குறையவேனும் திருப்தி யேற்படவில்லை. சிலர் மிக்க அற்ப காரணங்களுக்காக 10-வது வருடம் எனக்குச் சஞ்சிகை யனுப்ப வேண்டாம் என்று வரைந்திருக்கிறார்கள், அன்னாரைப்பற்றிக் கடந்த சஞ்சிகையில் எழுதியிருக்கிறோம். அவர்கள் தாய்ப்பாஷையிலும் பத்திரிகைகளிலும் மெய்யான அபிமான முடையவர்களென்றாவது, பத்திரிகைகளால் அடையத்தக்க பலன்களை யறிந்தவர்களென்றாவது எண்ணக்கூடவில்லை. நமது சஞ்சிகைக்குச் சந்தாதாரர்களின் ஆதரணையின்றி வேறெவ்வித உதவியுமில்லை யென்பதைப்பற்றி பன்முறை வெளியிட்டிருக்கிறோம். ஆதலின் நண்பர்கள் இவ்விஷயத்தில் சரியான சிரத்தை யெடுத்துககொண்டால் நாம் சஞ்சிகையின் பக்கங்களை யதிகப்படுத்துவோம் என்பதில் ஐயமில்லை. சந்தாநேயர்கள் இனியேனும் தக்கபடி ஊக்கம் செலுத்துமாறு வேண்டிக்கொள்கிறோம்.

பயாஸ்கோப், நாடகம், சிற்றுண்டிக்கடை (காபிகிளப்) இது

போன்ற விஷயங்களில் ஒரு நாளையில் செலவழிக்கும் ஒரு ரூபா யாகிற அற்பத் தொகையை ஒரு வருடத்திற்குச் செலுத்தினால் "நம் தாய்ப்பாஷையின் அபிவிர்த்திக்கு உதவிசெய்கிறோம், நம் நாட்டுப் பத்திரிகையை யாதரிக்கிறோம், நாமும் அறியவேண்டிய பல அறிய விஷயங்களை யுணர்ந்து கல்வியை விர்த்தி செய்துக் கொள்ளுகிறோம், நம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவி செய்யும் புண்ணியத்தைப் பெறுகிறோம்" என்ற உணர்ச்சி நம் நாட்டார்க்கு எப்போது உண்டாகுமோ அன்றே நம் நாட்டாரின் குறைகள் நீங்கிச் சுகவாழ்வு உண்டாகும். கருணாநிதியாகிய பரம் பொருளே இதற்கருள்புரியவேண்டும். "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" ஓம்தத்ஸத்.

பத்திராதிபர்.

---

## மிருகபலமும் ஆன்மசக்தியும்.

உலகில் ஒருகாரியத்தைச் செய்து முடிப்பதற்கு, அல்லது ஒரு விஷயத்தில் பிரவேசித்து ஜெயமடைவதற்குச் சக்தி அதாவது வல்லமை வேண்டும். இதுவே பலம் என்பதும். இந்த அண்டரண்ட சராசரங்களை யெல்லாம் சிருட்டித்து, இரட்சித்துச் சங்காரம் செய்யும் கடவுள்தாமும் தமது சக்தியினாலேயே அக்கிருத்தியங்களைச் செய்கிறார். அவரிடமுள்ள சக்திக்கு அபின்ன சக்தி என்று பெயர். அதாவது அவரிடமிருந்து பிரிக்கப்படாத சக்தி (அக்கினியில் உள்ள சூடுபோன்றது). அதற்கே பரை அல்லது பராசக்தி யென்னும் நாமங்களுமுண்டு. உலகில் விருத்தியுண்டாவது பெண்பாலினிடமே. ஆண்டவன் காரணமாக விருந்து பொருளீட்டினும் உணவு முதலியவைகளைத் தயாரித்து யாவரையும் போஷிப்பது மாதர்களே. ஆகையால் உலகங்களையெல்லாம் ஈன்று அளிக்கும் அம்மகாசக்தி பெண்பாலாக உருவகப்படுத்தப் பட்டது. புருடனும் மனைவியும் பரஸ்பர அன்பினால் உடலிரண்டும் உயிரொன்றும் என்னுமாறு ஐக்கியப்பட்டிருப்பதுபோல், அம்மகாசக்தியும் ஈசுரனினின்றும் பிரிபடாது ஐக்கியப்பட்டிருப்பதால், அவருடைய மனைவி யெனறு கூறப்பட்டதேயன்றி, சாதாரணமாக மானிடரிலுள்ள புருடன் மனைவிபோன்ற தன்மையில்லை. இதையுணரும் அறிவிலார் கடவுளுக்கு உலகினர்போல் மனைவி யுண்டென்று கூறப்பட்டதாக எண்ணி யிடர்ப்படுவர்.

"பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
* * * *
* * * * *
வாரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழ
வகிலாண்ட கோடி யீன்ற
வன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூபமயிலே
* * * * "

என்று தாயுமானவர் அருளியது கவனிக்கத்தக்கது.

இனி உலகில் பெரிய காரியங்களைச் சாதிக்கும் மனிதர்கள் உபயோகிக்கும் சக்தியைப்பற்றி கவனிப்போம். மனிதரின் வல்லமையில் தேகபலம், மனோபலம் என்று முக்கியமான இருவித சக்திகளுண்டு. சில காரியங்களுக்குத் தேகபலம் ஒன்றேபோதும். வண்டியிழுக்கும் மிருகத்திற்கு வேண்டியதுபோல் மூட்டை சுமக்கும் மனிதனுக்கும் வேண்டியது தேகபலம் ஒன்றே. சில காரியங்களுக்கு தேகபலத்தோடு மனோபலம் அல்லது புத்திபலமும் வேண்டும். விசேஷமாய்க் கைத்தொழிலாளிகள் போன்றவர்களுக்கு இவை இரண்டும் வேண்டியவைகளே.

உலகில் மனோபலம் புத்திபலத்தால் தொழில் செய்வோர்க்கே அதிக ஊழியமும், கௌரவமும் உண்டு. அவர்களுக்குச் சாதாரண இயற்கையான தேகபலமே போதுமானது. தேகபலத்தினும் மனோபலமே சிறந்தது. அதனினும் சிறந்த சக்தியொன்றுண்டு. அதுதான் ஆத்மசக்தியென்பது. நாம் மேலே கூறிய மிருகபலம் என்பது தேகபலமும் மனதின் தமோகுணத்தைச் சேர்ந்த ஆத்திரம், உரோஷம், மிருகத்தைப்போன்று தனக்கு நேரிடும் ஆபத்திற்கு அஞ்சாத முரட்டுத்தனம், கடினசித்தம் முதலியவை சேர்ந்ததாகும். அதைக் கையாளுபவரிடம் தமது நோக்கத்தை யீடேற்றிக்கொள்ளவேண்டும், அல்லது இச்சித்தபொருளைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஒரே எண்ணமேயன்றி, நீதியாவது, இரக்கமாவது, கடவுள் சிந்தனையாவது இராது. காட்டில் மேய்ந்து கொண்டிருக்கும் ஒரு மானைக் காணும் வேங்கைக்கு "நாம் அதைப் பிடித்தடித்துத் தின்னவேண்டுமென்ற ஒரே யெண்ணமட்டும் உண்டன்றி, அய்யோ நமது பசிக்காக நிரபராதியாகிய அதை யேன் நாம் கொல்லவேண்டும், அதைக் கொன்றுவிட்டால் தம் தாயின் வரவை யெதிர்பார்த்து ஆவலோடு காத்திருக்கும் அதன்

குட்டிகள் பரிதவிக்குமே, இந்த நம் செய்கை கடவுளுக்கொவ்வா தல்லவா, என்பது முதலிய சிந்தனையே அதற்குக் கிடையாது. இதைப்போலவே மனிதர்களிலும் மிருகபலத்தைக்கொண்டே காரியசித்தி பெறுவோருண்டு. மேல்நாட்டார் ஆறறிவுடைய மக்களேயாயினும் மிருக பலத்தையே பெரும்பான்மையும் கையாளுகிறார்கள். தங்கள் தீட்சணியமான புத்திவல்லமையை யும் மிருகபலத்தைப் பல வழிகளில் விர்த்திசெய்வதிலேயே யுப யோகிக்கிறார்கள். அவர்கள் ஆஸ்திகர்கள் என்றே கருதப்படி னும் அவர்களிடம் தெய்வசிந்தனை மிகக்குறைவே. ஆன்மார்த்த நூற்பயிற்சியவர்களிடம் இல்லையென்றே கூறலாம். ஆகவே ஆன் மசக்தி என்ற ஒரு இணையற்ற வல்லமை நமக்குள்ளாகவே அவ் வியக்தமான (வெளிக்குத் தோற்றப்படாத) நிலைமையிலிருக்கிறது என்ற உணர்ச்சி யவர்களிடம் காணப்படுவதில்லை.

கடந்த மகா ஐரோப்பாயுத்தமே அதற்குப் போதிய சான் றாகும். அந்தப் பெரும்போருக்கு என்ன காரணமென்று ஆரா யப்புகுந்தால், தக்க காரணமே கிடைக்காது. ஸர்வியா நாட்டின் இராஜகுமாரன் ஒருவன் கொல்லப்பட்டானெனின், அதற்காக அவனைக் கொன்ற ஆளை அல்லது ஆட்களைத் (நாற்பதைம்பது பேர் இருந்தாலுமிருக்கட்டும்) தண்டித்தால் போதுமன்றோ. அதை விட்டு அதிற் சம்பந்தப்படாத பெரிய தேசங்களெல்லாம் யுத்தத்தில் பிரவேசித்து இலக்ஷக்கணக்கான ஜனங்களை மாளச் செய்து பல தேசங்களுக்கும் சொல்லொணா துன்பங்களை விளை வித்ததற்குக் காரணம் என்ன? சண்டைக்கு முன் ஒவ்வொரு நாடும் தன் தன்வரையில் க்ஷேமமான நிலைமையிலேயே யிருந்த தன்றோ. அப்படி யிருக்க எக்காரணம்பற்றி அத்தகைய துன் பங்களை யுண்டாக்கிக்கொண்டார்கள்?

பேராசையும், இன்னொருவன் நம்மிலும் அதிக பலமடைய லாகாது, மற்ற தேசங்களை யெல்லாம் அடக்கி நம் ஆணையே கடல் முழுமையும்கூட செல்லத்தக்கதாக விருக்கவேண்டும் என்ற பொறாமையும் அகங்காரமுமே அந்த யுத்தத்திற்குக் காரணம்.

அவர்களும் நம்மைப்போல் ஒரு மதத்தை யனுசரிக்கும் ஆஸ்திகர்களாக விருக்க அவர்களிடமேன் ஈசுரசிந்தனை முதலிய ஆன்மார்த்த விஷயங்கள் திருப்தியாயில்லையெனின் கூறுதும். மேல்நாட்டார் அனுசரிப்பது கிருஸ்துமதம். கிருஸ்து கீழ்நாட்டி

லிருந்தே அங்கு சென்று தமதுமதத்தை யவர்களுக்குப் போதித்தார். அக்காலத்தில் அந்தநாட்டார் நாகரீகமற்ற முரடர்களாயிருந்தார்கள். அத்தகையோருக்கு ஏகமூர்த்தியாகி எங்கும் நிறைந்த ஒரு கடவுளே உளர் என்பதைப் போதிப்பதே அவசியமானதாக விருந்தது. ஏசுகிருஸ்து கூறிய உபதேசங்களின் பொருள்களை யுணரக்கூடிய நிலைமையில் அவர்கள் இல்லை. ஆகையால் மத போதனையால் அவர்கள் இலௌகீக விஷயங்களில் திருத்தமடையவில்லை. அவர்கள் தங்களுடைய மிருகத்தன்மையான நடக்கைகளில் ஒருவித சீர்திருத்த மடைந்தார்கள் என்றுமட்டும் கூறலாகும். அச்சீர்திருத்தமும் வெளிப்பகட்டுமட்டு முடையதே. அவர்களுடைய இலௌகீக ஆசாரங்களும் ஒழுக்கங்களும் மதசம்பந்தமானவையல்ல. ஏசுவின் நடக்கைகளையும்,போதனைகளையும் மானிடராகிய இவர்களே எப்படி பொருட்படுத்திக்கொண்டார்களோ அப்படி அதையே சித்தாந்தமாக வைத்துக்கொண்டார்கள். அதனால் ஒருவர் போதித்த அம்மதத்தில் இரண்டு பிரிவுகளையுண்டாக்கிக்கொண்டு, இருகட்சிகளும் குரூரமாய்ச் சண்டையிட்டுக்கொண்டார்கள். சொல்பகாலத்திற்கு முன்பிருந்துதான் ஏசு கூறிய உபதேசங்களின் உண்மைக்கருத்தைக் கொஞ்சம் கொஞ்சம் யறியத்தொடங்கி யிருக்கிறார்கள்.

இவர்கள் சூக்குமபுத்தி ஜடசாத்திரங்களில் வேலைசெய்வதிலேயே யுபயோகப்படுத்தப்பட்டது. ஆதிமுதல் ஒருவருக்கொருவர் பொறாமைகொண்டு சண்டையிடுவதும், ஒரு நாட்டாரை யின்னொரு நாட்டார் கொள்ளையடிப்பதும் சிறைபிடித்துக்கொண்டு போவதுமாக விருந்தார்கள். அதனால் ஒவ்வொரு நாட்டாரும் கொலைக்கஞ்சாது தைரியத்தோடு யுத்தம்செய்யும் சுபாவமுடையவர்களாகவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதற்காகவே பல விதக் கொலைக்கருவிகளையும் அமைத்துக்கொள்ளத் தொடங்கினார்கள். தங்கள் சூக்குமபுத்தியை யித்தகைய காரியங்களுக்கே உபயோகிப்பதால் இதில் முதல்தர வல்லமையுடையவர்க ளாகிவிட்டார்கள். ஒவ்வொரு நாட்டாரும் மிருகபலத்தால் மற்ற எல்லாரையும் அடக்கித் தாங்களே உலகில் தலைமையதிகாரம் செலுத்த வேண்டும் என்ற ஆவலுடையவர்ளா யிருக்கிறார்கள்.

மேல்நாட்டார் இந்த விஷயத்தில் எவ்வளவுக்கெவ்வளவு முன்னேறினார்களோ, அவ்வளவுக்கவ்வளவு ஆன்மார்த்த விஷயங்களில் பின்னடைந்துவிட்டார்கள். தங்கள் சூக்குமபுத்தியைக்

கொண்டு, சற்றும் சந்தடியுண்டாக்காமல் ஒரு விநாடியில் பன்னிரண்டு முறை சுட்டு பன்னிரண்டு பேரைக் கொல்லத்தக்க துப்பாக்கியை எப்படிச் செய்யலாமென்று சிந்தித்து முடிப்பதில் ஏராளமான பணத்தையும் வருடக்கணக்கான காலத்தையும் செலவழிக்க உடன்படுவார்கள். ஆனால் மனநாசம் என்பதென்ன? அதையெவ்வாறடைவது? என்ற கிஞ்சித் நினைவேனும் அவர்கள் மனதில் முளைப்பது முயற்கொம்பேயாகும்.

மிருகபலத்தின் பெருமை யிவ்வாறிருக்க இனி மனோசக்தி ஆன்மசக்திகளைப்பற்றி கவனிப்போம்.

மனோசக்தி அல்லது மனோபலம் என்பது அலையும் மனதையகத்தடக்கி அது நம் இஷ்டப்படி நடக்கும்படி செய்தல். அத்தகைய மனம் எக்காரியம் எப்படி முடியவேண்டுமென்று பிரியப்படுகிறதோ, அப்படியே யக்காரியம் முடியும். மனதினிடத்தில் அபாரமான சக்தி அடங்கியிருக்கிறது. அதை யடைவது கஷ்டசாத்தியமாகும். ஏனெனில் பேராசை, பொறாமை, கெட்ட எண்ணம் முதலிய தீய பூண்டுகளை யெல்லாம் பறித்தெறிந்தால்தான் மனமாகிய பூமி சுத்தமடைந்து அதில் நடப்படும் வித்து முளைத்து பலன்தரும். இதில் எவ்வளவு ஈசுர சிந்தனையும் ஈசுரனிடம நம்பிக்கையு முண்டோ அவ்வளவிற்கவ்வளவு பலனுண்டாகும். மனோசக்தியில் ஆத்மசக்தியின் பிரகாசம் தாக்காவிடின் அது ஒன்றுமே செய்யமுடியாது. ஏன்? அது இல்லையென்றே கூறலாம். சூரியன் மேகத்தின் பின்னிருந்து வெளிச்சம் காட்டுவதுபோன்றது மனோசக்தி. மேகம் கலைந்தபின் சூரியன் தன் கிரணங்களை வீசி ஒளியளிப்பது போன்றது ஆன்மசக்தி. ஆசையற்ற தன்மையும் சுயநலம் கருதாத குணமும், பொறுமை, சாந்தம், பிறர் நலத்திற்கு எதையும் தியாகம் செய்தல், ஜீவகாருண்யம், அஹிம்சாதர்மம் முதலிய குணங்கள் அமைந்த விடத்தில்தான் ஆன்மசக்தி வெளிப்படும்.

ஆன்மசக்தி தெய்வ சக்தியே யெனலாம். மனதின் இரஜோதமோகுணங்கள் ஒழிந்து மனங் களங்கமற்ற உள்ளமானபோதுதான் ஆத்மசக்தி விளங்கத்தொடங்கும். ஞானிகளிடம் அச்சக்தி பூரணமாகப் பிரகாசிக்கிறது. ஆன்மசக்தியுடையோர்க்கு மற்ற எல்லோருடைய மனதையும் கிரகிக்கும் சக்தியுண்டு. அதனால் தான் மகான்கள் பல்லாயிரம் ஜனங்கள் தங்கள் சொற்படி நடக்குமாறு செய்கிறார்கள். அவர்கள் சிந்தனை யெதுவும் ஈடேறும்.

ஆன்மசக்தி, ஆன்மஞானம் முதலியவைகளுக்கு நமது புண்ணிய பூமியாகிய பாரதகண்டமே தாய்வீடாகும். ஆன்மசக்தியின் முன் மிருகபலம் தலையெடுக்க முடியாது. நம் நாட்டில் பூர்வீகத்தில் ஆன்மசக்தியுடையோர் அனேகர் இருந்தார்கள். அச்சக்தியால் அவர்கள் அரிய காரியங்களைச் செய்தார்கள். நம் முன்னோர் மிருகபலத்தை வெறுத்தார்கள். அவர்களுக்கு அது அவசியமாகவும் இருந்திருக்கவில்லை. ஏனெனில், முற்காலத்தில் கல்வியென்றால் ஆன்மார்த்தக் கல்வியென்றே பொருள். குருவினிடம் சீடன் கல்விகற்கச் சென்றால், இலக்கண இலக்கியத்தோடு வேதங்கள். வேதாங்கங்கள், உபநிஷத்துகள், நீதிநூற்கள், இதிகாசங்கள், புராணங்கள், முதலியவைகளே யவனுக்குப் போதிக்கப்படும், சீடர்கள் கல்விகற்பதோடு சதாசாரங்களிலும், சுயத்தியாகத்திலும் பழக்கப்படுவார்கள். குருவை ஈசுவரனாகப் பாவித்துப் பணிவிடை செய்வார்கள். பணிவிடையென்றால் குருவின் வீட்டில் எத்தகைய வேலையும் செய்வார்கள். குருவின் வேஷ்டிகளைத் துவைப்பார்கள்; அவர் மாடுகளை மேய்த்து வருவார்கள்; விறகு பொறுக்கி வருவார்கள். மேலும் கல்வி முடியுமட்டும் (கிட்டத்தட்ட முப்பது வயதுவரையிலேனும்) பிரம்மசரிய விரதத்தை யனுஷ்டித்து வந்தார்கள். இக்கால மாணவர்கள் இவற்றைக் கேட்டால் அருவருப்பும் நகைப்பும் அடைவார்கள் என்று கருதுகிறோம். அக்காலத்திய மாணவர்கள் அவ்வாறு நடந்துகொண்டிருந்ததால் ஆடம்பரமற்ற சுகமும் க்ஷேமமுமான வாழ்க்கையோடு திடமும், சுகமும், தீர்க்காயுளும்பெற்று ஞானிகளாய் இம்மை மறுமைப் பலன்களை யடைந்தார்கள்.

இக்காலத்திய மாணவர்கள் கற்கும் கல்வியோ கல்வியென்ற பெயர்க்கே உரியதல்ல. மேல்நாட்டு ஆடம்பரமான நாகரீக மயக்கத்தில் சிக்கி ஈசுர சிந்தனையில்லாதவர்களாய் உலக சம்பந்தமான ஜடப்பொருள்களையன்றி வேறு சிந்தனையில் மனம் செல்லாதவர்களாய், ஆன்மார்த்த கல்வியைப்பற்றிய சிந்தனையே யில்லாதவர்களாய் வாழவேண்டிய மார்க்கத்தில் செல்கிறார்கள். நம் முன்னோரது ஆசார ஒழுக்கங்களும், ஆடம்பரமற்ற அடக்கமான வாழ்க்கையும் இவர்களுக்கு இழிவானவைகளாய்த் தோன்றுகின்றன. காலையில் பழஞ்சாதம் சாப்பிடுவது மிக்க அநாகரீகமென்றும் காபி, ரொட்டி சாப்பிடுவது நாகரீகமென்றும் கருதுகிறார்கள்.

இவற்றின் குணங்களிலுள்ள தாரதம்மியத்தைக் கவனித்தாவது நடப்போம் என்ற சிந்தனையும் இவர்களிடமில்லை. பன்முறை சிறந்த வைத்தியர்களும், அறிவாளிகளும் அவற்றைப்பற்றி பத்திரிகைகளில் வரைந்தாலும் இவர்கள் அதைச் சட்டை செய்வதில்லை.

இவர்கள் ஆன்மசக்தியைப்பற்றி நினைப்பதேயில்லை. ஏனெனில் இவர்கள் கல்வியில் அதற்கு இடமில்லை. இவர்களுடைய உபாத்தியாயர்களோ அதைப்பற்றி போதிக்கும் நிலைமையிலில்லை. நம் நாட்டார் மிருகசக்தியாவது பெறுவதற்கும் வழியில்லை. தாமே தமது தற்காப்பிற்காகக்கூட ஒன்றைச் செய்யச் சுயாதீனமின்றி "போடு திம்மா மூன்று கரணம்" என்றால் போடவேண்டிய நிலைமையிலிருப்பவர்கள், எவ்வித ஆயுதப்பயிற்சியும் பெறாது தடுக்கப்பட்டிருக்கிறவர்கள், எவ்வாறு மிருகபலமேனும் பெறுவது? ஆன்மசக்தி பெறும் மார்க்கம் நம் கையிலிருக்கிறது. அதை நாம் பெறாதபடி தடுக்க ஒருவராலும் முடியாது. அதிலோ நம்மவர்க்குச் சிந்தை செல்வதில்லை. இரண்டு சக்தியு மில்லாமலிருப்பவர்களின் கதி என்னாகும். திரிச்சங்கு சொர்க்கமா? அதுவும் ஆத்மசக்தியாலன்றோ உண்டாக்கப்பட்டது.

நம் தாய்நாடு முன்னேற்ற மடையவேண்டுமாயின் பின்னால், அதற்காக வேலை செய்யவேண்டியவர்களாகிய நம் சந்ததியாரன்றோ தகுதியான வழியில் பயிற்சி செய்யப்படவேண்டும். அவர்கள் இப்போது செல்லும் சீர்கேடான கீழ்நோக்கு வழியிலேயே செல்லும்படி விடப்படுகிறவரையில் நம் நாடு ஒருபோதும் பூர்வீக உன்னத நிலையை யடையாது. இக்காலத்தில் தாய்தந்தையருக்கே அதைப்பற்றிய கவலையில்லை. அவர்கள், மேல்நாட்டு நாகரீகத்தில் தம் ஆண்மக்களையும் பெண்மக்களையும் பயிற்சி செய்வதில்மட்டும் ஆவலுடையவர்களாக விருக்கிறார்கள். அப்படிச் செய்வதுதான் தம்மக்களை உருக்கத்தோடு சிறப்பாக வளர்ப்பதென்று எண்ணுகிறார்கள். "தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்" என்பதைக் கவனிப்பதில்லை. இந்த விஷயத்தில் சிறத்தை யெடுத்துக்கொண்டு நம்மக்களுக்குத் தக்க கல்வியைப் போதிக்கும் முறைகளை யுண்டாக்கக்கூடிய உயர்ந்த பதவிகளிலிருக்கும் நம்மவர்க்கே இதில் அக்கரையில்லை யெனில் நாம் யாரைத்தான் சரணடைவது? கருணாநிதியாகிய பரம்பொருள்தான் இனி நம்மவர்க்கு நல்வழி காட்டி யருளவேண்டுமாய் அவரையே சரணடைவோமாக.

ஓம் தத்ஸத்.

---

# இந்தியாவில் பிச்சைக்காரர்.

தருமம் எல்லாவித புண்ணியச் செயல்களுக்கும் முதன்மையானது. "ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன் கொடுக்கிறான்" என்று இயேசுக்கிருஸ்து திருவாய் மலர்ந்தருளிய வாக்கியம் எவ்வளவு பொருளுடைத்தாயிருக்கிறதென்பது ஆராய்ச்சியினால் தெற்றெனப் புலப்படும். அன்பு இருந்தாலொழிய எவனும் தருமம் செய்யமாட்டான். இதுபற்றியே உலகத்தில் அவசியமானபோது இடத்துக்கும் காலத்துக்கும் தக்கபடி திருவவதாரமெடுத்த நமது சர்வேசுரன் தாமெடுத்த பலவித அவதாரங்களில் முக்கியமான, கிருஷ்ணாவதாரம், இராமாவதாரம் கிறிஸ்து அவதாரம், புத்தாவதாரம், மகம்மது அவதாரம் முதலிய ஒவ்வொன்றிலும் எல்லாரிடத்திலும் (உயிர்வாழும் பிராணிகள் முதல்) அன்பா யிருக்கவேண்டும் என்பதையே உலகத்தாருக்கு முக்கியமாகப் போதித்தார். இது விஷயமாய் நமது முன்னோர்களும் வசனங்களாலும், கவிகளாலும் இனிது கூறிப் போந்தனர்.

2. தருமம் பலவகைப்படும். கோவில், சத்திரம், சாவடி, தண்ணீர்ப் பந்தல் முதலிய கட்டவும்; பாடசாலைகள் ஏற்படுத்தவும், பலருடைய பிழைப்புக்கேதுவான தொழிற்சாலையை ஸ்தாபிப்பது முதலிய காரியங்களுக்குப் பொருள் மூலமாகவோ, சரீரப் பிரயாசையினாலோ உதவிசெய்வது ஓர்வித தருமம். மேற்கூறியபடி உதவிசெய்ய முடியாதவர்கள் மற்றவர்களைத் தூண்டிவிட்டு காரியம் சித்தியாகும்படி செய்வதும் தருமமாகும். இதுவுமுடியாதவர்கள் இப்படிப்பட்ட தருமகாரியங்களுக்கு இடைஞ்சல் செய்யாமலாவது இருப்பதும் ஓர் தருமமெனலாம். ஆனால் மேற்சொன்ன எந்த வகையிலும் ஒருவித தருமத்தையும் செய்யாத பலரை எத்தேசத்திலும் காணலாம். நிற்க,

3. ஏழைகளுக்குப் பணமோ, பொருளோ, உடுப்போ, அன்னமோ கொடுத்து ஆதரிப்பதே சிறந்த தருமமாகும். இதுபற்றியே கிறிஸ்துவும் "ஏழைக்கு இரங்குகிறவன்" என்று வருணித்துள்ளார் "பாத்திரமறிந்து பிச்சைகொடு" என்ற ஆன்றோர் மொழிக்குப் பொருள், பிச்சை யெடுப்பவர்களுக்கு என்னதேவையென்பதையும், அவர்கள் கோரும்பிச்சைக்குத் தகுதியுடையவர்களா என்பதையும் அறிந்து பிச்சையிடவேண்டுமென்பதே. எல்லாவித தானங்களிலும் அன்னதானமே சிறந்தது. எப்படியெனில் ஒருவனுக்குப் பணம், பூமி, ஆடுமாடு, வீடு முதலியவற்றில் எவ்வளவுதான் தானம் செய்தபோதிலும் போதுமென்று சொல்லவேமாட்டான். மேலும் அவ்வித தானம் பசியால் உயிர்போகும் நிலையிலிருக்கப்பட்ட ஒருவனைக் காப்பாற்றி உடனே திருப்தி செய்யக்கூடியதாயுமில்லை. அன்னதானமோ அப்படியின்றி பசியால் வருந்தும் ஒருவனை அவ்வருந்துதலினின்றும் உடனே மீட்பதோடு வயிறு நிறையச் சாப்பிட்டவுடன் போதுமென்று சொல்லும்படி அவனைத் திருப்தியடையச் செய்துவிடுகிறது. முக்கியமாய்

எவ்வித வேலையும் செய்யமுடியாத கூன், குருடு, நொண்டி, முடம் முதலிய அங்கப்பழுதானவர்களுக்கே தர்மம் செய்யவேண்டுமென்று நூல்களில் கூறப்பட்டுள்ளது முற்றிலும் பொருத்தமானதே. எனினும் தற்காலம் இந்தியாவில் வேலைசெய்து ஜீவிக்கக்கூடிய பலமும் தைர்யமும் உள்ள பலர் பிச்சையெடுப்பதை நாள்தோறும் காணலாம். அப்படிப்பட்ட ஒருவன் நம்மிடம் வந்தால் உடனே "உனக்கென்ன கையில்லையோ? கால் நொண்டியா அல்லது குருடா? தீவட்டித் தடியன்போலிருந்துகொண்டு பிச்சையெடுக்கிறாய், உனக்கு பிச்சை கொடோம் என்று சொல்லித் துரத்திவிடுகிறோம். இப்படிச் சொல்லித் துரத்திவிடுகிற நாம் கூறும் சமாதானம் யாதெனில் "இப்படிப்பட்டவனுக்கு நாம் பிச்சைகொடுத்தால் சோம்பேறியாகி வேலைசெய்யமாட்டான், அதனால் நமக்குப் பாவமேயொழிய புண்ணிய மெதுவுமில்லை" யென்பதே. இதுண்மையேயாயினும் வேலைசெய்யச் சக்தி, ஆவல் முதலிய இருந்தும் வேலை கிடைக்காமல் பட்டினியால் பீடிக்கப்பட்டவர்கள் எத்தனையோபேர் நமது இந்தியாவி லிருக்கின்றார்கள். அவர்களில் மானத்துக்குப் பயந்து வெளிவந்து பிச்சையெடுக்காமல் வீட்டுக்குள்ளேயே கிடந்து மடிபவர்கள் போக மீதிபேர் பசி வாதனை சகிக்கமாட்டாமல் மானத்தையும் விட்டு பிச்சையெடுக்க வெளியே புறப்பட்டு விடுகிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு ஏன் பிச்சை கொடுக்கக்கூடாது யென்பதுதான் கேள்வி.

4. கடந்த சென்ஸஸ் கணக்குப்படி இந்தியாவிலுள்ள பிச்சைக்காரர்களின் சங்கியை 28,82,641 ஆகும். இன்னும் பிச்சை யெடுக்கக்கூடிய நிலைமையிலிருந்தும் வெட்கத்துக்கஞ்சி வெளிவராம லிருப்பவர்களின் தொகையையும் சேர்த்தால் சுமார் 40 லட்சம் என்று மதிப்பிடலாம். இத்தனை பிச்சைக்காரர்கள் ஏற்படக் காரணமென்ன? என்ற கேள்வி அடுத்தாப்போல் ஏற்படலாம். இக்கேள்விக்கு உத்தரவு சொல்வது மிக எளிதே. எப்படியெனில் இந்தியாவில் வருஷந்தோறும் நமக்குள் நாமே மேற்கூறிய பல பிச்சைக்காரர்களை உண்டுபண்ணிவிடுகிறோம். இதற்குக் காரணம் நாம் வீண் மயக்கத்திலாழ்ந்து வெளி மினுக்குக்கும், தளுக்குக்கும், பகட்டுக்கும் ஆசைப்படுவதே. இதற்கு ஏட்டில் வரைந்து மாளாத பல காரணங்களிருப்பினும் சில உதாரணங்களை மட்டும் இங்கெடுத்துக் கூறுவோம். அவையாவன:—

5. முற்காலத்தில் நமது நாட்டினர் கைத்தொழில்களில் தேர்ந்தவர்களாகவும், பிற நாட்டினர் கண்டு பிரமிக்கக்கூடிய அளவுக்கு சிற்பம், வைத்தியம், தர்க்கம், பூகோளம், ககோளம், தாவரம், உடற்கூறு முதலிய சகல சாஸ்திர நிபுணர்களாகவும் சிறந்து விளங்கினர் என்பதை எவரும் மறுக்கக்கூடாதபடி பிரத்தியக்ஷமாயும், நூல்கள் வாயிலாகவும் நிரூபணம் செய்யலாகும். ஆனால் தற்காலம் நமது ஏமாற்றத்தினாலேயே அவற்றைக் கைக்கொள்ளாது சாக விட்டுவிட்டதும் தவிர, அற்ப சொற்பமாய் அனு

பவத்தில் கொண்டுவருபவர்களைக்கூட ஆதரிக்காமல் பரிதபிக்கவிட்டுப் பார்த்திருக்கிறோம்.

6. நமது நாட்டினரால், சகோதரர்களால், உற்பத்தி செய்யப்படும் துணி, சோப்பு, நெருப்புப்பெட்டி, கத்தி, பாதரக்ஷை, கண்ணாடி சாமான்கள், பென்சல், பிஸ்கோத், இவைபோன்ற பல பொருள்களை வாங்கி உபயோகிக்க மறுத்து ஜப்பானிலும், அமெரிக்காவிலும், பிரான்ஸிலும், ஜெர்மனியிலும், ஸ்வீடனிலுமிருந்து வரும் மேற்கூறிய பகட்டான செயற்கைப் பொருள்களில் மயங்கி அவற்றை விலைகொடுத்து வாங்குவதால் நமது திரவியம் அன்னிய நாடுகளுக்குப் போய்விடுவதோடு நமது சகோதரர்கள் செய்யும் பொருள்கள் விலையாகாதது பற்றி அவர்கள் தொழிலை விட்டு, வரும்படி கெட்டு, பசியினால் பீடிக்கப்பட்டு பிச்சையெடுக்க ஆரம்பித்துவிடுகிறார்கள். விவசாயத்துக்கு வேண்டிய கலப்பையைக்கூட அன்னிய நாட்டிலிருந்து தருவிக்கிறோம். சில பெரிய பாரிஸ்டர்களும், ஜமீன்தார்களும், பிரபுக்களும் தங்களுடைய துணிகளைக்கூட பிரான்ஸ் முதலிய தேசங்களுக்கனுப்பி வெளுத்து உடுத்துகிறார்களென்றால் வேறு என்ன உதாரணங்கள் வேண்டும்? இதனால் நம் நாட்டிலுள்ள வண்ணார், கொல்லர், தச்சர், சக்கிலியர் முதலியவர்களுடைய பிழைப்பையும் கெடுத்து பிறநாடுகளிலுள்ள தொழிலாளர்களுக்கு அதிக பிழைப்பையும், பொக்கிஷத்தையும் விர்த்தி செய்துவிடுகிறோம்.

7. நமது நாட்டினர் செய்யும் மேற்கூறிய பொருள்கள் சுத்தமாயும், உறுதியாயும், அழகாயும் இல்லையென்று சொல்லுவது நொண்டிச் சமாதானமேயாகும். ஏனெனில் ஒருவன் முதல்முதல் ஓர் தொழிலை யாரம்பித்தவுடனேயே தேர்ந்த பொருள் செய்வது முடியாதகாரியம். ஆனால் முதலாவது அவன் செய்யும் சாமான் நேர்த்தியாக இல்லாவிட்டாலும் சற்று விலையதிகமாயிருந்தாலும் அதை வாங்கிக்கொள்வதால் மேலும் மேலும் தொழிலில் விர்த்தியடைந்து நல்ல சாமான்களைச் செய்து சொற்ப விலைக்குக் கொடுக்கும்படி செய்துவிடலாம். இதற்கு தனவான்களே சுயநலம் பாராட்டாது முன்வரவேண்டும். அதை விட்டு உண்மையறியாது தற்சமயம் ஓர் நல்ல நிலைமையிலிருக்கும் பலர் அந்த நிலைமையே சதமென்று மனப்பால் குடித்துக்கொண்டு நமது தேசத்தொழிலாளர்களை ஆதரிக்காமல் விட்டால் அவர்கள் பின்சந்ததி கஷ்ட நிலைமைக்குட்படுமென்பது நிச்சயமே.

8. மற்றத் தேசத்தினரோடு ஒப்பிட்டுப் பார்க்குங்கால் நமது தேசத்தினர் எவ்வளவு தரித்திரராய்ப் போனார்களென்றும், அதனால் மரண விகிதம் எவ்வளவு அதிகமென்றும் கீழ்க்கண்ட விவரத்தால் காணலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| * இந்தியாவில் | ஒருவனுக்கிருக்கும் | சராசரி | சொத்து மதிப்பு | ரூபா | 180 |
| கனடாவில் | ஷை | ஷை | ஷை | ,, | 4400 |
| இங்கிலாந்தில் | ஷை | ஷை | ஷை | ,, | 6000 |

(*நமது ஆனந்தனின் சித்திரைமீ சஞ்சிகை 399-ம் பக்கம் பார்க்க.)

ஒவ்வொருவனும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்யும் மூலதனம். இந்தியாவில் ரூபா 25. கனடாவில் ரூபா 510. இங்கிலாந்தில் ரூபா 640

| | | |
|---|---|---|
| இந்தியாவில் | மரணவிகிதம் | 30 பேர். |
| கனடாவில் | ,, | 14 பேர். |
| இங்கிலாந்தில் | ,, | 14 பேர். |

9. மேற்கண்ட விவரத்தைப் பார்த்து திடுக்கிடாதவரும் உளரோ? என்பது சந்தேகமா யிருக்கிறது. இனிமேலாவது நமது சகோதரர்கள் மேல் மினுக்கையும், தளுக்கையும், விலையையும் கவனியாது சுதேசப் பொருள்களை உபயோகிப்பார்களானால் நாளடைவில் நேர்த்தியான சாமான்கள் மிகவும் மலிவாய்க் கிடைக்கும் வண்ணம் நமது நாட்டுத் தொழில் விர்த்தியாகி, பிச்சைக்காரர்களின் சங்கியையும் குறைந்து நம் நாடு மற்ற நாடுகளைப்போல் ஐசுவரியத்தில் பெருகும்படி செய்துவிடலாம். அப்படிச் செய்யாது நமக்குள்ளேயே நாம் பிச்சைக்காரர்களை உண்டாக்கிவிட்டு பிச்சை கேட்பவர்களிடம் "நொண்டியா? கூனு? குருடா? வேலை செய்து பிழை" என்னும் வார்த்தைகளை மனப்பாடம் செய்துகொண்டு பாடிவிடுவதில் அர்த்தமேயில்லை. ஏற்கனவே தரித்திரத்தில் கிடந்துழலும் நமது ஏழைத் தொழிலாளர்களை ஆதரிக்காமல் இன்னும் கஷ்டநிலைமைக் குட்படுத்திவிட்டு, பணத்திலேயே கிடந்து புரளும் அன்னியநாட்டுத் தொழிலாளர்களையே மேலும் மேலும் ஐசுவரியவான்களாக்குவதை நோக்குமிடத்து "தன்னுடன்பிறந்தார் தண்ணீர்க்குத் தாளம் போடுகையில் தஞ்சாவூரில் தம்பி சத்திரம் கட்டுகிறானும்" என்ற பழமொழியை ஞாபகப்படுத்துகிறது. இவ்விதம் செய்வது பெரிய பாவமாகும். கடவுளுக்கும் பொருத்தமானதாகாது. பிச்சை கேட்பவர்களுக்கெல்லாம் கொடுக்கவேண்டும் அல்லது நமது நாட்டுத் தொழிலையும், தொழிலாளரையும் ஆதரிக்கவேண்டும். பின் கூறியதைக் கைக்கொள்வதே மேலானது. இவ்விரண்டிலொன்றையேனும் செய்யாவிட்டால் மாட்டையும் அவிழ்த்துவிட்டு போரிலும் தீ வைப்பதற்கே யொப்பாகும். ஆகையால் உலகத்துக்கே சகல நன்மையான காரியங்களிலும் முன்மாதிரியாக நடக்கவேண்டுமென்று விரும்பும் பாரத மாதாவின் மக்களே! மேல் மினுக்குக்கும், தளுக்குக்கும் ஆசைப்பட்டும், சற்று அதிக விலைக்குப் பயந்தும் நமது நாட்டுத் தொழிலாளரை உயிரிழக்கும்படி செய்யாமல் தாய்நாட்டுத் தருமத்தை நிலைநிறுத்தும் வண்ணம் நமது புத்தியைச் சரியான முறையில் உபயோகித்து உச்சநிலை யடைய இனியாவது பிரயாசப் படுவீர்களா? பாரத மாதாவின் வயிறு குளிரச் செய்வீர்களா? அல்லது இன்னும் எரியும் தீயில் எண்ணெயைத்தான் வார்ப்பீர்களா? யோசித்துப் பாருங்கள். எம்பெருமான் கருணைபுரிவார்.

A. மெத்துசலா, உபாத்தியாயர்,
போர்டு பெண்பாடசாலை,
ஜெயங்கொண்ட சோளபுரம்.

# கை இராட்டினம்.

கை இராட்டினத் தொழிலை அபிவிருத்தி செய்தல் வேண்டுமென்று இப்போது நமது நாடெங்கும் பேசப்பட்டு வருகின்றது. சிலர் தங்களாலியன்ற முயற்சிகளையும் ஆங்காங்கே செய்து வருகின்றனர். சில நண்பர்கள் இராட்டினத்தை மில்களோடு (எந்திரங்களோடு) போட்டிபோட முடியுமா? அவ்வளவு ஏராளமாக துணிகளையும், அவ்வளவு சகாயமான விலைக்கும் கைராட்டினத்திலிருந்து உற்பத்தியாக்க முடியுமா? என்று கேட்கிறார்கள்.

இப்பொழுது கைராட்டினத்தைக் கையில் பிடித்து ஆறுமாதங்கள் கூட ஆகாத நண்பர்களில் சிலர் சுமார் எண்பதாம் நெம்பர் மில் நூலுக்கு இணையாகவும் கரடுமுரடின்றி ஒரே தரமாகவும் நெசவுக்கு உபயோகப்படும்படி நூல் நூற்றுவருவதை நாம் நேரிலேயே பார்க்கிறோம். இதனால் ஆதி காலத்தில் நம் இந்து தேசத்தில் வழங்கிய டெக்கா மஸ்லின் விஷயத்தில் நம்பிக்கையற்றிருந்தவரும் நம்பும்படியாக இருக்கிறது. ஆகையால் நமக்கு இக்கைராட்டினங்களிலிருந்து மெல்லிய வேட்டிகள் கிடைக்குமென்பதில் யாதொரு சந்தேகமும் கிடையாது.

மில்களிலிருந்து கிடைக்கிற அளவு கைராட்டினங்களிலிருந்து எடுக்க முடியுமா? என்பதை ஆராய்ந்து பார்க்குங்கால் கட்டாயம் கிடைக்குமென்றே நம்ப இடமிருக்கின்றது. ஆனால் ஒரு மில்லில் நூற்கிற அளவு ஒரு இராட்டினத்தைக்கொண்டு நூற்கமுடியாதென்பது யாவரும் அறிந்த விஷயமே. இதில் மில்லையும் இராட்டினத்தையும் நேருக்கு நேரே சரி பார்ப்பது முறையன்று. ஒரு மில்லின் தொழிலைப் பங்கிட்டு ஆயிரக் கணக்கான நமது பெண்களின் கையில் கொடுத்தால் அம் மில் நூற்கின்ற அளவுக்குமேல் நம் இந்தியப் பெண்கள் நூற்பார்களென்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. முப்பத்து முக்கோடி ஜனங்கள் அடங்கிய இவ்விந்து தேசத்தில் சுமார் நான்குகோடி ஜனங்கள் கைராட்டினத்தைக் கையில் பிடிப்பார்களேயானால் நம் இந்துதேசமல்ல, இவ்வுலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் வேண்டிய துணிகளுக்கு நூல் நூற்றுவிடலாம். நெசவு மில்களும் நூற்கும் மில்களும் இல்லாத காலத்தில் நமது இந்திய மக்கள் யாதொரு கவலையுமின்றி கைத்தறிகளையும் கை ராட்டினங்களையும் கொண்டு பிழைக்கவில்லையா? அப்பொழுதெல்லாம் நம் இந்திய ஏழை மக்கள் துணிகளில்லாமல் வருந்துவதை நாம் கேட்டுமிரோம் கண்டுமிரோம். அப்படி இருக்க நெசவு மில்களும் நூற்கும் மில்களும் தலை எடுத்தாடுகிற இக்காலத்தில் நம் எதிரிலேயே உடுக்க ஆடையின்றி வருந்தும் ஜனங்களை நாம் ஆயிரக்கணக்காகக் காண்கிறோம். தற்காலங்களிலும், சேலம், காஞ்சீபுரம், கோயம்பத்தூர், கும்பகோணம், மதுரை முதலிய நகரங்களில் நெய்யும்படியான துணிகள், ஆயிரக்கணக்கான நம் இந்திய ஜனங்களால் உபயோகப்படுத்தப்படுகின்றன என்பதை யாவரும் அறிவர். இம்மாதி

ரியே இன்னும் சில நகரவாசிகள் நெய்வதிலும் நூற்பதிலும் சில காலத்தை உபயோகப் படுத்துவார்களேயானால் நம் இந்தியர் இன்னும் மேலான நிலைமைக்கு வருவார்களென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. இத் தத்துவத்தை அநுபவத்தில் கொண்டுவந்த பிறகே நமது நண்பர்கள் சிலர்க்கு நன்றாய் விளங்கும்.

யாவர்க்கும் இன்றியமையாத வஸ்துக்கள் உணவும் உடையுமே ஆகும். இவ்விரு பொருள்களும் இல்லாதவனுடைய மனம் வேறு ஒரு பொருளிடத்தும் இச்சைவையாது என்பது நிச்சயம். முற்காலங்களில் நம் முன்னோர்கள் அவர்களுடைய காலத்தைப் பயிரிடுவதிலும் நூல் நெய்வதிலும் செலுத்திவந்தார்கள். அதனால் இப்பொருள்கள் ஏராளமாக நமது நாட்டில் உற்பத்தியாகிக்கொண்டிருந்தன. அப்படி இருந்ததால் எல்லோரும் வறுமை என்பதே தெரியாமல் க்ஷேமமாய் காலங்கழித்துவந்தார்கள். அக்காலத்துப் பெண்களெல்லாம் தத்தம் குடிசைகளுக்குள்ளே நூல் நூற்றுக்கொண்டிருந்ததினால் அவர்களுடைய கற்பிற்கு யாதொரு ஹானியும் ஏற்படாமல் இருந்தது. இக்காலத்தில் நம்மிந்தியப் பெண்பாலர் வறுமையினால் வீட்டைவிட்டு வெளியேவந்து வேலை செய்து வயிறு வளர்ப்பதினால் அவர்களுடைய கற்பு காலக்கிரமத்தில் அழிந்து வருவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். இவ்வளவிற்கெல்லாம் காரணம் நம் நாட்டில் அன்னிய நாட்டார் வந்து சம்பந்தப்பட்டதே என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. பெண்மக்கள் தம் இல்லத்தை விட்டு வெளியே சென்று மற்றொரு ஆடவனிடத்து அடங்கித் தொழில் புரிவது நமது ஹிந்துமத தர்மத்திற்கு விரோதமே ஆகும். அப்படியிருக்க நமது நாட்டுப் பெண்மக்கள் பலர் குடிக்கக் கஞ்சியற்றுக் கட்டிளம் பருவத்திலேயே களையுற்று வாடி வதங்கி இரந்துண்ணவும் நாணி வயிறும் முதுகும் உலர்ந்து கிடப்பதை நாம் ஆங்காங்கே காணவில்லையா? இத்தனைத் துன்பங்களும் கைராட்டினத் தொழில் செழித்திருந்த காலத்திலிருந்தனவோ?

ஆகையால் ஏழைமக்கள் வயிறெரிய இம் மில் துணிகளை நாம் கட்டுவதிலும், அவர்களுடைய மனப்பூர்த்தியுடன் நூல் நூற்ற துணியை நாம் கட்டுவது பெருமையே ஆகும். அக் கதராடை எவ்வாறு இருந்தாலும் என்னே? நம் இந்தியாவில் பிறந்து, இந்தியாவில் வளர்ந்து, இந்திய வுணவை யுண்ட நம் இந்திய மக்கள் இந்தியத் துணியை யுடுக்க நாணுதல் தகுதியாமோ? பெரியோர்களே! ஏழை மக்களிடம் கருணைகொள்ளுங்கள்! இந்தியரை இந்தியராக்குவதுமான புண்ணியத் துணியை உடுத்துங்கள். பெண்பாலர்களே! கைராட்டினத்தைச சுழற்றி மக்கட்கு விடுதலையளியுங்கள்!

பா. சு. ல. இராமஸ்வாமி,
திருவண்ணாமலை.

குறிப்பு:—நண்பர்களே! சுருங்கச்சொல்லின், பூர்வீகத்தில் நமது நாட்டார்க்கு வேண்டிய துணிகள் யாவும் நம் நாட்டிலேயே நெய்யப்பட்டு வந்தன. பிறகு ஆங்கிலர் நம் நாட்டில் வந்து சேர்ந்தபிறகுதான் நெசவுத்

தொழில் குன்றிப்போய்விட்டது. நாமும் காலக்கேட்டின்படி மதியிழந்து, சுயநல உணர்ச்சியும் அற்றவர்களாகி, அன்னியநாட்டு வெளிப்பகட்டில் மயங்கி, துணிகள் முதல் இல்வாழ்க்கைக்கு வேண்டிய மற்ற சாமான்களை யும் அன்னியநாட்டாரிடமே வாங்கத் தொடங்கிவிட்டோம். "நம் நாட்டில் உற்பத்தியாகும் இயற்கைப் பொருள்களை வாங்கிக்கொண்டுபோய் தான் அன்னியநாட்டார் இப்பொருள்களைச் செய்துவந்து நம்மிடமே விற்று அதிக இலாபம் சம்பாதிக்கிறார்கள். நம் நாட்டு இயற்கைப் பொருள் களாகிய பருத்தி முதலியவற்றைக்கொண்டு நாமே நமக்குவேண்டிய துணி முதலியவைகளை யுற்பத்தி செய்துகொண்டால் பலவிதங்களில் நமக்கு இலாபம் கிடைக்குமல்லவோ" என்ற சாதாரண அறிவைக்கூட நாம் இழந்துவிட்டோம். இதுமட்டுமோ? இதனால் ஒருசமயம் பெரிய இடுக்கண்கூட நேரலாகும். அதாவது எதிர்பாராத யாதாமொரு விசேட காரணத்தால் அன்னிய நாட்டுத் துணி நம் நாட்டிற்கு வருவது தடைப்பட்டுவிட்டால் நாம் மிருகங்கள்போல் அம்மணமாகத்தான் கொஞ்சகாலமேனும் திரிய நேரிடும். இதைக்கூட நாம் எண்ணி நடக்கும் அறிவாளிகளாயில்லை.

நமது இந்த நடக்கையால் நம் நாட்டிற்குண்டான தீங்கை யுணர்ந்த அறிவாளிகள், இனியேனும் நமக்கு வேண்டியவற்றை நாமே செய்து கொள்ளவேண்டுமென்று நமக்குப் புத்திபுகட்டினார்கள். இன்னும் புகட்டி வருகிறார்கள். மகாத்மா காந்தியடிகள் நமக்கு வேண்டிய துணிகளை நாமே நூல்நூற்று நெய்துகொள்ள வேண்டுமென்ற சஞ்சீவி மந்திரம் போன்ற விஷயத்தை வற்புறுத்திக் கூறினார். இப்படி நாமே உற்பத்தி செய்துகொள்ளும் துணிக்குக் கதர் துணி என்று பெயர். இவ்வளவே யன்றி இது ஒரு புது விஷயமல்ல.

மகாத்மாகாந்தியடிகள் கூறியதாலும் கதர் என்ற ஒரு புதுப் பெயர் புனையப்பட்டதாலுமே விஷயமறியாத பாமரர், இது ஒரு புது கிளர்ச்சி யென்றும், அதிலும் இராஜாங்க சம்பந்தமானதென்றும் கருதிவிடுகிறார் கள். இது மூடத்தனமான ஒரு பெருந் தவறேயாகும். இவர்களே இப் படிப் பிரஸ்தாபிப்பதால் அன்னியநாட்டாராகிய துரைத்தனத்தார் தங்கள் நாட்டுக்கு வந்திருந்த இலாபம் குறையுமெனக்கருதி நமது முயற்சி யீடேற லாகாதென்று கோருகிறார்கள். அவர்களிடம் ஊழியம் செய்யும் நம்மவ ரிற் சிலரும் தங்களுக்கு ஏதோ செல்வாக்குண்டாகுமென்று அந்த இடையூறு உண்டாகும் விஷயத்தில் அவர்களுக்கு உதவி செய்கிறார்கள்.

நாம் துரைத்தனத்தாரிடம் சேவகம் செய்வதால் நம் நாட்டுத் துணி யை நாம் கட்டலாகாதென்று பீதியடைகிறார்கள். இதைவிட மூடத்தன மும் கோழைத்தனமும் வேறுண்டோ. இத்தகையோர "நீ யுன் தாயாருக்கு அன்னமளித்து ஆதரித்தால் உன்னை வேலையினின்று நீக்கிவிடுவோம்" என்று மேல் அதிகாரி கூறின், உடனே பத்து மாதம் சுமந்து பெற்ற மாதாவை மனையினின்றும் துரத்திவிடுவார்கள் என்பதில் ஐயமில்லை. இன் னொருவருக்குத் தீங்கிழைக்கும் எண்ணமின்றி நமது நன்மைக்காக நாம்

செய்யவேண்டிய காரியத்தைச் செய்ய பீதியடையும் கோழைத்தனம் நம்மிடம் இருந்தால் நாம் மிருகங்களில் சேர்க்கப்படுவோமேயன்றி மனிதராகக் கருதப்படமாட்டோம். நாம் இப்படி நடந்துகொள்வதால்தான் அன்னிய நாட்டார் நம்மை மிருகங்களினும் கேவலமாய் மதிக்கிறார்கள், நடத்துகிறார்கள். இது நம் மனத்திலுறுத்தவேண்டாவோ.

நேயர்களே! எந்த ஜாதியாரேனும் தாங்கள் முன்னேற்ற மடையக்கூடிய மார்க்கம் செம்மையாய்ச் செப்பனிடப்பட்டுக் கண்முன் தோன்றும்போது, அதிற் செல்லப் பயந்து பெருங்கேட்டை விளைவிக்கும் பாதையில் செல்வார்களோ? அப்படிச் செல்வோர் அறிவாளிகளாவார்களோ? நமது நாட்டுக் கைத்தொழிலை நாம் ஆதரித்தாலன்றிக் கடவுள் நமக்குச் சகாயம் செய்யவேமாட்டார்.

பத்திரிகாசிரியர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

### தெய்வம்—பக்தியோகம்.

(9-ம் தொகுதி 462-ம் பக்கத் தொடர்ச்சி.)

சரீரமுள்ளவர்க்கு (தேகாபிமானமுள்ளவர்க்கு) இந்திரியங்களுக்கெட்டாத பரம்பொருள் கிட்டுவதில்லை. பக்தியும் ஆராதனைகளும் கர்மத்திலே சேர்ந்தனவேயாம். அதனாலேதான், தாம் செய்கிற சர்வ கர்மங்களையும் எனக்கு ஒப்புவித்துவிட்டு, என்னையே பிரதானமாகக் கருதிப் (பிரதி) பலனை எண்ணாமல் தியான முதலியனவற்றால் என்னைப் பக்தி செய்கிறவனை மிருத்தியு சொரூபமான சம்சாரத்தினின்றும் நான் கரையேற்றி விடுவேன்'' என்று கண்ணன் கீதையில் அருளிச்செய்தார். அன்றியும் "என்னிடத்தில் உன் மனதையும் புத்தியையும் நிலையாக நிறுத்தி என்னிடத்திலேயே (என் அருள் வெளியில்) குடியாக வசித்திரு. இப்படி மனதையும் புத்தியையும் என்னிடத்தில் நிறுத்த அப்பியாசஞ் செய். அப்பியாசம் செய்யச் சக்தியில்லாவிடின், என்னைக்குறித்துக் கர்மங்களைச் (முற்கூறிய ஆராதனையாகிய சற்கருமம்) செய். என்னைக்குறித்து கர்மங்களைச் செய்வதனால் நீ மோட்சசித்தி பெறுவாய் (இந்தக் கர்மங்களினால் மனம் அடங்கி நிற்குமென்பது). என்னிடத்தில் மனதை நிறுத்திக் கர்மங்களைச் செய்யச் சக்தியில்லாவிட்டால், சித்தசுத்தியுடன் கர்மங்களைச் செய்து அவற்றின் பலனை இச்சியாமல் விட்டுவிடு (அந்தக் கர்மங்களைப் பலனோடு எனக்கு அர்ப்பணம் செய்துவிடு). அப்பியாசத்தை* விட ஞானம்† சிறந்தது, ஞானத்தைப்பார்க்கினும் தியானம் மேலானது, தியானத்தை விடப் பலனைக் கருதாத கர்மம் மேலானது. இந்தக் கர்மபல தியாகத்தால் சித்தசாந்தியுண்டாம்'' என்றும் அருளிச்செய்தார்.

---

* ஞானத்திற்காகச் செய்யும் சிரவணம் யோகம் முதலிய அப்பியாசம்.

† இங்கு ஞானம் என்பது ஆன்ம நிச்சயத்தை யுணர்த்தும் பரோக்ஷ ஞானம்.

எல்லாப் பிராணிகளிடத்திலும் துவேஷமில்லாமலிருக்கவேண்டும். எல்லாச் சீவன்களிடத்திலும் சினேகத்துவம் பாராட்டவேண்டும். எல்லாப் பிராணிகளிடத்திலும் கருணை பாராட்டவேண்டும். சரீரேந்திரியங்களிற் பற்றற்றிருக்கவேண்டும். அகங்காரத்தை ஒழித்திருக்கவேண்டும். சுக துக்கங்களில் சமபுத்தி யிருக்கவேண்டும். பொறுமையை யடைந்திருக்கவேண்டும். தன் உபாசனாமூர்த்தியை எப்போதும் சிந்தித்துக் கொண் டிருக்கவேண்டும். விஷயங்களில் செல்லும் மனதைத் தடுக்க வேண்டும். ஸ்திரசித்தமுடையவனாய் உபாசனா மூர்த்தியினிடத்தில் மனதை நிறுத்தவேண்டும். இச் செய்கைகள் பக்தியோகத்திற்கு அவசியம் வேண்டியவைகளாம். இதைக்குறித்த விஷயத்தில், "பிரமத்திற்கு அன்னிய பொருள்களில் விருப்பமற்றவனாயிருக்கவேண்டும். மாம்சபட்சணாதித் தாமச ஆகாரங்களை ஒழிக்கவேண்டும். சாஸ்திர விகிதமான ஆகாரத்தைப் புசிக்கவேண்டும். இவற்றைக் கைக்கொண்டால் அவன் மனம் பரிசுத்தமாகும். க்ஷமையுண்டாம். சத்துரு மித்திரர்களென்கிற வேறுபாடு தோன்றாது. சாஸ்திரம் விதித்த கர்மங்களில் சிரமமின்றி அனுஷ்டிக்கலாம். சாஸ்திர விரோதமான கர்மங்கள் ஒழிந்துபோகும். அப்போது என்னிடத்தில் ஸ்திரமான பக்தியுண்டாகும். அவனே எனக்குப் பக்தனாவான்" என்று கண்ணன் கீதையில் கூறியருளினார்.

"சத்துரு மித்திரர்களிடத்திலும், மானாவமானங்களிலும், சீதோஷ்ணங்களிலும், சுகதுக்கங்களிலும், நிந்தாஸ்துதிகளிலும் சம சித்த முடையவனாயிருக்கவேண்டும். எதிலும் பற்றில்லாதவனாயும், மௌன விரதமுடையவனாயும், திருப்தியுடையவனாயும், ஆத்ம சொரூபத்தையன்றி மற்றொன்றையும் ஆசிரயிக்காதவனாயு மிருக்கவேண்டும். இதுவே ஸ்திர பக்தியாம். இப்படிப் பக்தி செய்கிறவனே எனக்குப் பிரியமானவன்" என்றும் கூறியருளினார். இவ்வாறு கண்ணன் கூறியவற்றைக் கைக்கொண்டொழுகாமற்போனால் பக்தியோகம் சித்திப்பது கஷ்டமாம். மோட்சாபேட்சையுடைய புண்ணியாத்மாக்களுக்கு இது எளிதாம். மற்ற யோகங்களைவிடப் பக்தியோகம் சிலாக்கியமுடையதே. இந்திரியங்களாலுணரும் விஷயங்களையே மனம் பற்றி நிற்கும். அதிலும் கண் காதுகளாகிய இந்திரியங்களாலறியப்பட்ட பொருள்களை மனது மறப்பதில்லை. அதிலும் கண்களாற் கண்டறிந்த பொருள்கள் மறக்கப்படுவதேயில்லை. கண்களால் கண்டறிந்த விஷயங்களைத் தியானிப்பது எளிது. ஆகையாலே நாம் கண்களால் கண்டு தரிசிக்கும் தெய்வ சொரூபங்களைச் சிந்தித்துக் கடைத்தேறும்பொருட்டு நூல்கள் விதித்தன.

இவ்வாறு சிந்தித்து பக்திசெய்யத் தக்கவை குரு,இலிங்கம், சங்கமம் என்று கூறும் மூவகைச் சொரூபங்களாமென்று முன்னரே கூறப்பட்டது. மூவகைச் சொரூபங்களுள் குரு, சங்கமம் என்பன சரப்பொருள்களாம். லிங்கம் அசரப்பொருளாம். இதனால் சரம் அசரமாகிய இருவகைச் சொரூபங்களையும் சிந்தித்துப் பக்திசெய்யலாமென்பது விளங்கும். இதைக்

கூர்ந்து நோக்கச் சராசர பேதங்களாகிற இருவகைப் பொருள்களும் பிரம சொரூபமேயாமென்பது நன்கு புலப்படும். எல்லாப் பொருள்களும் பிரம சொரூபங்களேயாமென்பது ஸ்திரப்பட்டால் கண்ணன் கீதையிற் கூறிய வழிபற்றி நடப்பது மிகவும் எளிதாகும். ஸ்திரப்படுவது அருமையாதல் பற்றியே இவ்வழியை அப்பியாசம் செய்துகொள்ள வேண்டுமென்று கண்ணன் கூறியருளினார். அப்பியாசத்தினாலேயே எல்லாமாகவேண்டும். அப்பியாசம் செய்யாவிட்டால் ஒன்றும் கைகூடாது. பழக்கமென்கிற அப்பியாசத்தினாலேயே இலவுகிக விவகாரங்களெல்லாம் நடந்தேறி வருவதை நாம் பிரத்தியட்சத்திற் காணலாம். பழக்கத்தினால் எதையும் சித்தியாக்கிக்கொள்ளலாம் என்பது நிச்சயம். அப்பியாசம் செய்ய முடியாவிட்டால் கர்மங்களைச் சிரத்தையுடன் செய் என்று பகவான் விதித்தருளினார். ஏனென்றால் ஆசை எதிலிருக்கிறதோ அதில் மனமும் பற்றுதலாயிருக்கும். மனம் பற்றி நிற்குமாயின் அக் கர்மமும் இடையூறுகளின்றி ஒழுங்காய் நடத்தப்படும். கர்மங்களெல்லாம் கருதிய பலனைக் கொடுத்து அழியும் இயல்புடையனவாதலால் பலனைக் கருதாமல் செய்ய விதித்தார். பலனைக் கருதாமற் செய்வது சாத்தியமில்லையாகையால் அந்தக் கர்மத்தைச் செய்து அதைத் தனக்கு அர்ப்பணம் பண்ண விதித்தார். ஒருவன் தான் ஆராதிக்கும் கடவுளுக்கு அர்ப்பணம் பண்ணினதைத் தான் அனுபவிக்க விரும்பான் என்பது நிச்சயம். இதனையே கர்மபலத் தியாகமென்று நூல்கள் வியந்து கூறின. இதனால் வேதம் விதித்த கர்மங்களும் செய்யப்படுகின்றன. அவற்றின் பலன் தன்னை யடைவதில்லை. இந்தக் கருமபலன் கர்த்தாவை‡ அடைவதே கருமபந்தம் (கர்மக்கட்டு) என்னப்படும். இந்தப் பந்தமே ஜனனமரணங்களுக்கும் இன்ப துன்பங்களுக்கும் ஆதாரமாய் நிற்பது. இதுவே அறிவை மறைத்து நின்று அஞ்ஞானமென்று பெயர் பெறுவது. கர்மபலனைத் தான் ஆராதிக்கும் தெய்வத்தினிடத்தில் ஒப்புவித்து விடுவதினால் அவன் அஞ்ஞானமற்றவனாகிறான். அஞ்ஞானம் அறவே மெய்ஞ்ஞானம் தானே பிரகாசிக்கும். ஞானவொளி தோன்றவே அவ்வொளியினால் தான் வழிபடும் தெய்வத்தின் அற்புதானந்த சொரூபம் வெளிப்படும். ஒன்றனைப்பற்றியே நிலைபெறும் மனது அந்தச் சொரூபத்தைப் பற்றிக்கொள்ளும். அது ஆனந்த சொரூபமாதலால் மனம் அதில் ஆனந்தானுபவம் பெற்று நிற்கும். அப்போது பயனற்ற உலகப் பொருள்களையும் சிற்றின்பத்தையும் விரும்பாது. தான் புதிதாய்க்கண்ட சொரூபத்தையே தரிசித்துக்கொண்டிருக்கும். அதையே பெரிதாகச் சிந்தித்துக்கொண்டிருந்தால் உலகம் மறக்கப்படும். உலகை மறந்து அதையே தரிசித்துச் சிந்தித்துக்கொண்டிருக்க, அந்த மாயசபள சொரூபம் கொஞ்சங்கொஞ்சமாய் மறைந்து கடைசியில் தனது இயற்கைச் சொரூப தரிசனம் தரும். அதைத் தரிசிப்பதுவே யோகஞானங்களால் பெறத்தக்க பயனும். அதுவே மோட்சம், வீடு என்று வழங்கப்படும் முக்தியாம். ஆத

‡ கர்மத்தைச் செய்தவரை.

லாற்றூன் பக்தியோகத்தினுல் எளிதிற் பேறு பெறலாமென்று நூல்கள் கூறின. இத்தகைய பக்தியோகம் எந்த வருணத்தாரும், எத்தகையாரும் செய்யக்கூடும். ஆனுல் சோம்பலென்கிற ஒரு குணத்தை ஒழித்து ஊக்கத்துடன் செய்யவேண்டும், சோம்பலென்பது மனிதருக்குப் பெரிய சத்துருவாம். அதனுல் எல்லாக் காரியங்களும் கெடுகின்றன. அசிரத்தை, அலட்சியம், மனச்சலிப்பு, களைப்பு முதலியவற்றினு லுண்டாகும் ஓர் வகையான துர்க்குணமே சோம்பலாம். இதற்கு மூலமாகிய அசிரத்தை முதலியவற்றைப் பற்றற களைந்துவிட்டால் சோம்பலுண்டாகாது. சோம்பலின்மையும், தொடுத்த காரியத்தைத் தடையற முடிக்கவேண்டுமென்கிற விருப்பமும் அவசியம் இருக்கவேண்டும். மேற்கூறிப் போந்த துர்க்குணங்களை ஒழித்து, நன்னெறி பற்றி நின்று பரம்பொருளை ஆராதித்துப் பூசித்து வழிபட்டு, இடைவிடாமல் தியானித்துக்கொண் டிருப்பதே பக்தியோகமாம்.

## மானசயோகம்.

யோகமென்பவை யெல்லாம் மனதை யடக்கி வசப்படுத்தித் தன் இச்சைபோல நடத்த முயற்சிப்பதேயாம். மானசயோகமென்று ஒன்று தனியே பிரித்துச் சொல்லப்படவில்லை. சில விடங்களில் மானதயோகமென்கிற பிரஸ்தாபம் மட்டும் உண்டு. ஞானயோகமும் இதுவும் ஒன்றுகவே காணப்படும். எல்லா யோகங்களும் ஞானத்துக்கு ஆதாரமே யாதலால் அவைகளையும் ஞானயோகம் என்னலாம். இப்படியே சித்தர்கள் வாசியோகமாகிய ஹடயோகத்தை ஞானமென்பர். அந்தந்த யோகங்கள் அதனை ஞானமென்றுதான் கூறும். ஞானத்தை யடைவதற்கே யோகமேற்பட்டது. யோகத்தினுல் பெறும் முக்கிய பயன் மனதை வசப்படுத்துதலாம். ஞானயோகம் பூர்வ ஜென்மங்களில் செய்த புண்ணியபயனுலன்றிக் கிடைக்கப்பெறுது. ஞானமின்றி மோட்சம் கிடையாது. அந்த ஞானத்தை யோக அப்பியாசத்தினுல் அடையும்படி விதிக்கப்பட்டது. அப்பியாசங்க ளெல்லாவற்றுள்ளும் மானசயோகம் மிகச் சிறப்புடையது. அது மனதை விஷயங்களில் செல்லவிடாமல் தடுத்தலாம். வாயு அடங்கினுல் மனம் அடங்கும் என்பது வாசியோக நூலின் கருத்து. மனம் அடங்கினுல் வாயுவும் அடங்கும் என்பது இராஜயோக பரமாசாரியர்களின் கருத்து. அத்துவைத சித்தாந்த பரமாசாரியராகிய ஸ்ரீ சங்கர முனீந்திரர் கொண்ட கருத்தும் இதுவே. இன்னும் பல சிவராஜ ஞானயோகச் செல்வர்களுடைய கருத்தும் இதுவேயாம்.

இதற்கும் அப்பியாசம் சிறிது வேண்டப்படும். அது ஆசையை ஒழிக்கு முபாயமேயாம். முதலாவது நாவுக்கு உருசியை விரும்பாமல் ஒழிப்பது. உருசியுள்ள பதார்த்தங்களையே புசிக்கவேண்டுமென்கிற ஆசையை ஒழிப்பது. இதில் சித்திபெற்றவன் இரண்டாவதாக அதிசயமான பொருள்களை நோக்கவிடாமல் சக்ஷு இந்திரியத்தை யடக்கவேண்டும். இந்த

இரண்டு அப்பியாசங்களுமே கஷ்டமானவை. இவை சித்தியானபின், சுரோத்திரேந்திரியத்தை அடக்க முயலவேண்டும். அது சங்கீதம், வாத்தியம், கதை, ஆசியம் முதலியவற்றைக் கேட்க விரும்பாதபடி செவிப்புலனை யடக்குவதாம். அதை அடக்கிக்கொண்டால் மற்றைய பிராணேந்திரியம் பரிசேந்திரியமும் எளிதிலடங்கிவிடும் என்று பெரியோர்கள் கூறியிருக்கின்றனர். நூல்களுக்கும் இந்த அபிப்பிராயமுண்டு. ஆசைக்குக் காரணமாகிய இந்திரியங்களில் மனதைச் செலுத்தாமலிருப்பதே மானதயோகம் என்று தெரிந்துகொள்ளலாம். இதற்குத் தெய்வபக்தியே பெரிய உதவியாம். அதனாலேதான் பக்தியோகத்துக்குப் பின் இது கூறப்பட்டது. முறைப்படி தெய்வபக்தி செய்பவர்களுக்கு, இடைவிடாத தெய்வச்சிந்தனையில் பழகின மனம் வேறொன்றிலும் பற்றுவையாது இயல்பாக ஆசையொழிந்துவிடுதலால் இதனையே

> "காட்டிற் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின்
> வீட்டிற் புகுதன் மிகவெளிதே விழிநாசி வைத்து
> மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
> ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே"

ஆசையை யடக்கி மனதைத் தடுத்துக் கடவுளின் திருவடியில் நிலைபெற நிறுத்தல் எளிது. அதுவே மோட்சமார்க்கமாமென்பது கூறிக் கஷ்டப்பட்டுப் பிராணவாயுவை யடக்கிப் பிரமரந்திரத்தின் வழியே செலுத்தித் துவாதசாந்தத்திற் சேரச்செய்வது மிகவும் கஷ்டமானது என்பதை விளக்கி யருளினர். இதனால் சிவராஜ ஞான யோகமென்பது ஆசையை யொழித்தலாலேயே யாமென்பது நன்கு புலப்படும். (தொடரும்.)

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

## மகாத்மா காந்தியவர்கள் கூறிய அரிய விஷயம்.

நேயர்களே! நாம் இம்மானிட ஜன்மமெடுத்ததன் பயன், அதாவது பரமேசுவரன் மிக்க கிருபையோடு நமக்கு இச்சன்மத்தை யளித்ததன் நோக்கம், நாம் துக்க நிவர்த்தியும் ஆனந்தப் பிராப்தியுமாகிய மோக்ஷப்பேறடைவதேயாகும். அம்மோக்ஷமென்பது பிரம்மான்ம ஐக்கியமே. அதாவது ஆன்மா தன் நிஜ சொரூபத்தை யறிந்து பரமான்மாவோடு இரண்டறக் கலத்தலாம். ஆன்மா தன்னை யறிந்தபின், பரமான்மாவிற் கலப்பதில் ஒரு கஷ்டமுமில்லை. ஆன்மா தன்னையறிந்த சாட்சாத்கார நிலையில் நின்றால், பரமான்மா தானே யதை விழுங்கிக்கொள்ளும். அந்த நிலையில் ஆன்மா பரமான்மா எங்குளதென்று எதிரிட்டுநோக்கவேண்டிய அவசியமேயில்லை. வேங்கையிருக்கும் குகையின் முன் நாம் நின்றிருந்தால் வேங்கை தானே நம்மை விழுங்கிவிடும். என்னை விழுங்கு என்று நாம் போய் அதைக் கேட்கவேண்டியதில்லை. அதுபோல் அஞ்ஞான நிலையில் நமக்குத் தோன்றாது நமக்குள்ளேயே அாந்தியமாயிருந்து நம்மை இயக்கி

வந்த பரமான்ம ஞானநிலையில் நம்மைத் தனக்குள் ஐக்கியப்படுத்திக் கொண்டு அகண்டாகாரமாய்ப் பிரகாசிக்கும். ஆன்மா தன்னை யறிந்தபின் அந்த அகண்டாகார சொரூபத்தில் தன்னை யிழந்துவிடவேண்டுமேயன்றி, அங்கு எதிரிட்டு நோக்கின் பரமான்மா நமக்கு அந்நியமாகி நான் என்ற அகங்காரம் முளைத்து அனர்த்தமாய் முடியும்.

நிற்க, ஆன்மா தன் நிஜ சொரூபத்தை யறிவதிலேயே கஷ்டங்க ளனைத்தும் உள. அதற்கே சாத்திரமும், பக்தியும், ஆசானும், அப்பியாச மும் யாவும் வேண்டற்பாலன. ஆன்மாவின் நிஜ சொரூபத்தையறிய அதாவது தன்னைத்தானறியவேண்டின் மனதை யொடுக்கவேண்டியது இன்றியமையாத சாதனமாகும். இதற்காகவே சரியை, கிரியை, யோகம் முதலிய மார்க்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. மனதை யொடுக்குவ தெனின் மனம் இந்திரியங்களின் வழியாக வெளிச்சென்று விஷயாதிக ளில் பிரவேசிக்கவொட்டாமல் தடுத்து அது நமக்கு அடங்கி நம் பிரியப் படி நடக்கும்படி செய்தலாம்.

மனமோ எப்போதும் அலையும் சுபாவமுடையது. அதை யடக்கு வது யாவற்றினும் கஷ்டமான செயல் என்று அதற்காகப் பாடுபட்ட மகான்களெல்லாம் கூறியிருக்கின்றனர். மனம் இச்சா சொரூபம். ஆத லின் இச்சை யடியோ டொழிந்தாலன்றி மனம் ஒடுங்காது. எத்தனை சாத்திரங்களைப் படித்தாலும், வாயால் எவ்வளவு ஞானம் பேசினும், அனு பவமாய் மனதை யடக்க யார் முயற்சி செய்கிறார்களோ அவர்களுக்குமட் டுமே அதிலுள்ள கஷ்டத்தின் தன்மையும், அதைப்பற்றிய உளவுகளும், எந்த நிலை வந்தால் மனம் ஒடுங்கியதாகும், ஆசையற்றதாகும் என்ற உண் மையும், மனதை யொடுக்க என்னென்ன உபாயங்கள் தக்கவை யென்பது முதலிய விஷயங்களும் நன்கு விளங்கும்.

நமது மகாத்மாவாகிய காந்தியடிகள் "பிரம்மசர்ய விரதம்" என்ற தலையங்கத்தின் கீழ் "யௌவன இந்தியா" என்ற பத்திரிகையில் வரைந் துள்ள கட்டுரையில் மேல்கண்ட விஷயத்தைப்பற்றிய தமது சொந்த அனுபவத்தை வெளியிடுகிறார். மனோலயம் பெற உண்மையாக முயற்சி செய்யும் தக்க அதிகாரிகள், அதினின்றும் அனுபவமான பல உண்மை களை யறிந்து பயன்பெறலாகு மாதலின் அதைச் "சுதேசமித்திரன்" பத்தி ரிகையில் வெளியிட்டுள்ளபடி நாம் ஈண்டு வரைகிறோம் :—

## பிரம்மசரிய விரதம்.

### இதன் பொருளென்ன?

### மகாத்மாஜீ கூறும் விவரம்.

மகாத்மா காந்தியடிகள் சென்ற வியாழனன்று வெளிவந்த "யௌ வன இந்தியா" பத்திரிகையில் பின்வருமாறு எழுதுகிறார்:—

1. [நான் மே மாதம் 25-ந் தேதியன்று இக்கஷ்டமான பிரசினை யைப்பற்றி எழுதிய வியாசத்தை ஸ்ரீமான் மகாதேவதேசாய் ஆங்கிலத்தில்

மொழிபெயர்த்து இருக்கின்றார். இதே விஷயத்தைப்பற்றி இந்தியாவின் வேறு பாகங்களிலிருந்தும் பல கடிதங்கள் வந்திருப்பதால் அம்மொழி பெயர்ப்பை நான் சந்தோஷமாகக் கீழே பிரசுரித்துள்ளேன். தூய்மை யான வாழ்க்கையை நடத்துவதற்காக உண்மையாக முயற்சி செய்கிறவர் களுக்கு இந்த வியாசத்தில் கண்ட சில அபிப்பிராயங்கள் சிறிது உபயோ கமாக இருக்கக்கூடும். இவ்விஷயமாக எனது அபிப்பிராயங்களைத் தெரி விக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டவர்களெல்லாம் ஹிந்துக்கள்தான். அதனால் இவ்வியாசம் அவர்களுக்குத்தான் இயற்கையாக எழுதப்பட் டிருக்கிறது. இவ்வியாசத்தில் கடைசிபாகம்தான் மிகவும் முக்கிய மானது. அல்லா அல்லது கடவுளது நாமங்கள், எல்லாம் ஒரே விதமான சக்தியை உடையனவாக இருக்கின்றன. நம்முள் கடவுள் இருக்கின்றார் என்பதை உணர வேண்டுமென்பதே வியாசத்தின் முக்கிய நோக்கமாம். எல்லாவிதமான பாவங்களும் அந்தரங்கமாகத்தான் செய்யப்படுகின்றன. நம்முள் கடவுள் இருக்கின்றார் என்பதையும் அவர் நம்முடைய எண்ணங் களுக்கும் சாக்ஷியாக இருக்கின்றார் என்பதையும் நாம் உணர்ந்த க்ஷணமே நாம் விடுதலை யடைந்தவர்களாக ஆகிவிடுவோம்.]

2. பிரம்மச் சரியத்தைப் பற்றி எழுதுவதென்றால் சுலபமான காரிய மல்ல. எனக்கு ஏற்பட்ட மிகுந்த அனுபவத்தில் சிலவற்றை எனது வாச கர்களுக்கு எடுத்துரைக்க வேண்டுமென்ற விருப்பமானது எனது மனதில் எப்பொழுதும் மிகுதியாக இருந்துவந் திருக்கின்றது. அவ்விருப்பத்தை எனக்கு வந்த சில கடிதங்கள் இன்னும் அதிகமாகும்படி செய்தன.

3. பிர்ம்மச் சர்யமென்பதென்ன ? அதனைப் பூரணமாக அனுஷ் டிக்க முடியுமா ? அவ்வாறு செய்யக்கூடுமானால் தாங்கள் அதனை அனுஷ் டித்து வருகின்றீர்களா ? என்று ஒரு நண்பர் கேட்கின்றார். "பிரம்மத்தை அறிவது" என்பதே பிரம்மசர்யம் என்பதன் சரியானதாகவும் பூரணமான தாகவும் உள்ள அர்த்தமாகும். பிரம்மம் சர்வ வியாபியாய் இருக்கின்றது. ஆதலால் ஆத்ம விசாரணையால் பிரம்மத்தை எவரும் அறியலாகும். இந்திரி யங்களைப் பூரணமாக அடக்காவிட்டால் பிரம்மத்தைக் காண முடியாது. இதனால் பிரம்மசர்ய மென்றால் எல்லா விடங்களிலும் எச்சமயத்திலும் பஞ் சேந்திரியங்களையும் திரிகரணசுத்தியுடன் அடக்கிக்கொள்ளுவதென்று பொருள்படும். பிரம்மச்சர்யத்தைப் பூரணமாக அனுஷ்டிப்பவர் ஆடவ ராக இருப்பினும் சரி, மடவாரா யிருப்பினும் சரி அவர்கள் சற்றும் காம மற்றவர்களாக இருப்பார்கள். அப்படிப்பட்டவர்கள் கடவுளுக்குச் சமீப மாக இருப்பார்கள். அவர்கள் தெய்வத்தன்மை பெற்று விளங்குவார்கள்.

4. திரிகரண சுத்தியுடன் பிரம்மசர்ய விரதத்தைப் பூரணமாகக் கை யாளுவது சாத்தியமென்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால் பிரம்மச்சர்யத்தின் பரிபூரணமான பக்குவ நிலைமையை அடைய நான் எனது ஆயுட்காலத்தில் ஒவ்வொரு நிமிஷமும் முயன்றுகொண்

டிருந்தபோதிலும், இன்னும் நான் அந்நிலைமையை அடையவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

5. இந்த ஸ்தூல சரீரத்தைக்கொண்டே அந்நிலைமையை அடையக் கூடு மென்ற நம்பிக்கையை நான் இன்னும் விட்டுவிடவில்லை. நான் எனது ஸ்தூல சரீரத்தை அடக்கியாளும் சக்தி பெற்றுவிட்டேன். நான் ஜாக்ராவஸ்தையிலிருக்கும்பொழுது (அதாவது விழித்துக்கொண் டிருக்கும் பொழுது) எனது இந்திரியங்களை என் வசப்படுத்தி அடக்கியாள முடியும். நாவடக்கத்திலும் நான் சற்று வெற்றியுற்றுவிட்டேன். ஆனல் நான் எனது மனதை வசப்படுத்துவதற்கு இன்னும் பல படிகளைத் தாண்டவேண்டும். எனது எண்ணங்கள் என் இஷ்டப்படி தோன்றி மறைவதில்லை. இதனல் எனது மனதில் அடிக்கடி முரண்பட்ட எண்ணங்கள் தோன்றி இடைவிடாமல் போராட்டம் நடைபெறுகின்றது.

6. ஜாக்கிராவஸ்தையில் நான் எனது மனதில் முரண்பட்ட எண்ணங்கள் தோன்ற முடியாதபடி தடுத்துவிடமுடியும். ஜாக்கிராவஸ்தையிலிருந்து எனது மனதில் கெட்ட எண்ணங்கள் தோன்ருதபடி செய்ய என்ஞல் கூடும் என்று நான் கூறக்கூடும். ஆனல் சொப்பனுவஸ்தையில் எண்ணங்களை என் வசப்படுத்த எனக்குள்ள சக்தியானது குறைவாக இருக்கின்றது. சொப்பனுவஸ்தையில் எனது மனதில் எல்லாவிதமான எண்ணங்களும் தோன்றுகின்றன. எதிர்பார்க்கப்படாத கனவுகளும் இந்த ஸ்தூல சரீரம் முன்பு அனுபவித்த போகங்களில் விருப்பமும் அச்சமயம் மனதில் தோன்றுகின்றன. அனுபவமேற்பட இடமிருக்கின்ற பொழுது நாம் ஒருவரைக் காம மற்றவரென்று கூற முடியாது. காமம் குறைந்து வந்தபோதிலும் அடியோடு போய்விட்டதாகக் கூறமுடியாது.

7. என்னுடைய எண்ணங்களைக் கட்டுப்படுத்தும் திறமை எனக்குப் பூரணமாக ஏற்பட்டிருந்தால் நான் சென்ற வருஷங்களாக வயிற்றுக் கடுப்பு, மலக்குடலில் பிளவை நோய், சுவாசாய சம்பந்தமான நோய் முதலிய வியாதிகளால் அவஸ்தைப்பட்டிருக்கவே கூடாது. திட சரீரத்தில் தான் தூய்மையான ஆத்மா இருக்கு மென்பதை நான் நம்புகின்றேன். ஆதலால் ஆத்மா காமப்பற்றற்று வலிவடைந்து வரவர ஸ்தூல சரீரமும் அத்தன்மை வாய்ந்ததாக ஆகிவருகின்றது. இதிலிருந்து திடசரீரமுடையவர்களென்ருல் அவர்களது தேகத்தில் தசை அதிகமாக இருக்கவேண்டு மென்று பொருளேற்படாது. பெரும்பாலும் மெலிந்த சரீரமுடையவர்களே தீரர்களாக இருக்கின்ருர்கள். ஆத்மா பலம் ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் அதிகரித்துவிட்டால் ஸ்தூல சரீர வளர்ச்சியானது குறைவடைய ஆரம்பித்து விடுகின்றது. மிக்க திடசரீரம் வாய்ந்தவர்களுடைய சரீரமானது தசைப்பற்று இல்லாதிருக்கலாம். தசைப்பற்று மிகுந்த சரீரமானது பலகேடுகளுக் குறைவிடமாக இருந்து வருவது சகஜமாக இருக்கின்றது. பருத்த சரீரமுடையவர்களுக்கு வியாதிகள் இல்லாமல் இருந்த

போதிலும் அவர்களுக்குத் தொத்துவியாதிகள் தோன்ரு என்பது நிச்சயமில்லை. நல்ல திடசரீரம் வாய்ந்தவர்களுக்கு இம்மாதிரியான தொத்துவியாதிகளை எல்லாம் தடுக்கும் சக்தியிருக்கும். கலப்பற்ற ரத்தத்திற்கு எல்லாவித தொத்துவியாதிகளையும் தடுக்கும் சக்தி இயற்கையிலேயே ஏற்பட்டிருக்கின்றது. அம்மாதிரியான பரிபக்குவ ஸ்திதியை அடைவது என்பது கஷ்டம்தான். அதனை அடைவது சுலபமாக இருந்தால் இதற்குள் நான் அதனை அடைந்திருப்பேன். இந்தப் பரிபக்குவ ஸ்திதியை அடைவதற்காக நான் எவ்வளவு பாடுபட்டு வருகின்றேன் என்பது எனது ஆத்மாவிற்கே தெரியும்.

8. என்னை அந்த நிலைமையை அடையவொட்டாமல் செய்யக்கூடிய வெளித்தடை எதுவுமே இல்லை. எல்லோருக்கும் பண்டைய சமஸ்காரங்களை ஒழிப்பது சுலபமாக இராது. அதிலும் எனக்கு அதனை ஒழிப்பதற்கு மிக்க கஷ்டமாக இருக்கின்றது. ஆனால் அப் பரிபக்குவ தசையை அடைவதில் ஏற்படும் தாமதத்தைப்பற்றி நான் சிறிதும் மனங் கலங்கவில்லை. ஏனெனில் அப் பரிபூரண நிலைமை எப்படி இருக்குமென்பதை அறிவால் அறிந்திருக்கின்றேன். அந்நிலைமையை நான் சற்று கண்டு கூட அனுபவித்திருக்கிறேன். நான் அடைந்திருக்கும் முன்னேற்றத்தைக் கண்டு எனக்கு மனச்சோர்வு ஏற்படாமல் நம்பிக்கையே ஏற்படுகின்றது. என்னுடைய விருப்பமானது நிறைவேறு முன்பு நான் இந்த ஸ்தூல சரீரத்தை இழக்கும்படி நேரிட்டாலும் நான் எனது முயற்சியில் தோல்வி யடைந்துவிட்டதாகக் கருதமாட்டேன். ஏனெனில் நான் எனது தற்கால வாழ்க்கை எப்படி நிஜமானதென்று கருதுகின்றேனே அப்படியே மறுபிறப்புண்டென்பதிலும் நம்புகின்றேன். ஆதலால் அற்பமான முயற்சி செய்யப்பட்டாலும் அதுவும் வீணுகப் போவதில்லை என்பது எனக்குத் தெரியும்.

9. என்னுடைய நிருபர்களும் அவர்களைப் போன்றவர்களும் தன் நம்பிக்கையும் பொறுமையும் உடையவர்களாகவேண்டுமென்ற நோக்கத்துடன்தான் நான் என்னைப்பற்றி இவ்வளவுதூரம் கூறிவந்திருக்கின்றேன். எல்லோருக்கும் ஒரேவிதமான ஆத்மாதான் இருக்கின்றது. ஆதலால் ஒவ்வொருவரும் ஒரே விதமான ஸ்திதியை அடையமுடியும். சிலருக்கு ஆத்மதரிசனம் உண்டாகிவிட்டது. சிலருக்கு இனித்தான் ஆத்மதரிசன முண்டாகவேண்டி யிருக்கின்றது. ஒவ்வொருவரும் பொறுமையாக முயற்சி செய்தால் எல்லோருக்கும் ஒரேவிதமான அனுபவமே ஏற்படும்.

10. நான் இதுகாறும் பிரம்மச்சரியத்தின் விசேஷார்த்தத்தைப் பற்றி விவாதித்து வந்திருக்கின்றேன். சாதாரணமாக பிரம்மச்சரியமென்ருல் சிற்றின்பப் பிரியத்தை மனோ வாக்கு காயத்தால் அடக்குவதுதான் என்று பொருள் கொள்ளப்படுகின்றது. அதன் பொருளை அவ்வாறு கட்டுப்படுத்துவது மெத்த சரியேயாகும். இந்த பிரம்மசர்யத்தை யனுஷ்டிப்பது மிக்க கஷ்டமாக இருக்குமென்று கருதப்படுகின்றது. சிற்றின்

பப் பிரீதியை அடக்குவது மிக்க கஷ்டமாக இருக்கின்றது. அதற்கு அதனை அடக்குவதுபோன்று உருசியான பதார்த்தங்களிலுள்ள இச்சையையும் அடக்க வேண்டுமென்று கூறப்பட்டிருப்பதே காரணமாகும். வியாதியால் பீடிக்கப்பட்டு பலஹீனமாக இருப்பவர்கள்தான் சிற்றின்பப் பிரீதி மிகுந்தவர்களாக இருப்பார்களென்பது நமது வைத்தியர்களின் அனுபவமாக இருக்கின்றது. பலஹீனமாகஇருக்கும் ஜாதியார்கள் பிரம்மச்சர்யத்தை அனுஷ்டிப்பதும் கஷ்டமாக இருப்பது இயற்கைதான் என்று வைத்தியர்கள் கூறுகின்றார்கள். நான் மேலே மெலிந்ததாகவும் ஆனால் திடமாகவும் உள்ள சரீரமுடையவர்களைப் பற்றிக் கூறிவந்திருக்கின்றேன். நான் பரிபக்குவமான பிரம்மசர்ய தசையைக்குறித்து மிக்க பச்சைவெட்டாகப் பேசியிருக்கின்றேன். ஆதலால் எனது அபிப்பிராயங்களைப்பற்றித் தப்பர்த்தங்கொள்ளக்கூடும். ஆனால் ஐம்புலன்களையும் பூரணமாக அடக்க விரும்புகின்றவர்கள் சதை குறைந்துபோவதை வரவேற்க வேண்டுவது அவசியம். சரீரத்திலுள்ள பற்றுப் போய்விட்டால் ஸ்தூல பலத்தைப் பெறவேண்டுமென்ற ஆசையும் போய்விடும். உண்மையான பிரம்மச்சாரியின் தேகமானது தசைப்பற்றற்றதாயும் மிக்க தேஜஸ்வாய்ந்ததாகவும் இருக்கும். இம்மாதிரியான பிரம்மச்சாரி மானிடரைக் காட்டிலும் சற்று விசேஷ சக்தி வாய்ந்தவராக இருப்பார். கனவிலும் சிற்றின்ப இச்சையற்றிருப்பவர்கள் சகல விதங்களிலும் போற்றற் குறியவராவர். மற்ற இந்திரியங்களையும் அடக்கியாளும் சக்தி அவருக்கு ஏற்படும். சிற்றின்பப் பிரியமற்றிருக்கும் பிரம்மச்சரியத்தைப்பற்றி மற்றொரு நண்பர் பின்வருமாறு எழுதுகிறார்:—

11. "எனது நிலைமை பரிதபிக்கத்தக்கதாக இருக்கின்றது. நான் கார்யாலயத்தில் வேலை செய்யும்பொழுதும் சரி, ரஸ்தாக்களில் நடந்து போகும்பொழுதும் சரி, வாசிக்கும்பொழுதும் சரி, வேலை செய்யும்பொழுதும் சரி, சிற்றின்பப்பிரீதி சம்பந்தமான எண்ணங்களே என் மனதில் தோன்றுகின்றன. இராப்பகலாக என் மனதில் இவ்வெண்ணங்களே தோன்றுகின்றன. பிரார்த்தனை செய்யும்பொழுதும் என் மனதை காமப்பேய் பிடித்து அலைக்கின்றது. இம்மாதிரி சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும் மனதை எவ்வாறு நாம் வசப்படுத்துவது? ஒவ்வொரு ஸ்திரீயையும் ஒருவன் எப்படித் தனது தாய்போன்று கருதக் கற்றுக்கொள்வது? கண்களிலிருந்து தூய்மையான அன்பு ததும்பும்படி செய்வதெப்படி? கெட்ட எண்ணங்களை எப்படி போக்குவது? பல வருஷங்களுக்கு முன்பு தங்களால் எழுதப்பட்ட 'பிரம்மச்சர்யம்' என்ற வியாசம் என்வசமிருக்கின்றது. ஆனால் அது எனக்கு உதவியாக இருக்கவில்லை"

இந்திரிய வசியத்திற்குறிய சாதனம்.

12. இந்நிலைமையானது மனதைப் பிளக்கக்கூடியதாக இருக்கின்றது. இம்மாதிரியான ஸ்திதியிலிருந்து பலர் கஷ்டப்படுகின்றனர். ஆனால்

கெட்ட எண்ணங்களைப் போக்கவேண்டுமென்ற எண்ணம் மனதில் தோன்றி போராடிக்கொண்டிருக்கும் வரை நாம் மனச்சோர்வடைய வேண்டிய காரணமேயில்லை. கட்புலன் நெறிதவறிச் செல்வதாக இருந்தால் கண்ணை மூடிக்கொள்ளவேண்டியது அவசியம். செவிப்புலனானது நெறிதவறிச் செல்வதாக விருந்தால் நாம் காதை மூடிக்கொள்ளவேண்டும். எப்பொழுதும் நிலத்தைப் பார்த்தவண்ணமாக நடந்து செல்வது உசிதம். அவ்வாறு சென்றால் கட்புலன் நம்மை மீறிச்செல்ல இடமிராது. ஆபாசமான முறையில் பேசுமிடத்திலிருப்பதையும் ஆபாசமான பாட்டுகளைக் கேட்பதையும் தவிர்க்கவேண்டும். உருசியான பதார்த்தங்களிலுள்ள இச்சையை அடக்கியாளத் தெரியாதவர்கள் புலனிச்சையை அடக்கமுடியாது. சுவையிலுள்ள இச்சையை அடக்குவதே மிக்க கஷ்டமென்பது எனக்குத் தெரியும். நாவின் உருசியை அடக்கத்தெரிந்தால் மற்றப் புலன்களையும் தானாக அடக்கிவிடலாம். சுவை இச்சையை அடக்க வேண்டுமானால் அடியோடு மிளகாய் கடுகு முதலிய சாமான்களை விலக்கவேண்டும். அவ்வாறில்லாவிட்டாலும் அவற்றைக் கூடியமட்டும் தவிர்க்க முயற்சிசெய்ய வேண்டும். இதைவிட ஒரு கஷ்டமான விதி இருக்கின்றது. அதென்னவெனில் நாம் ஜீவித்திருப்பதற்காகச் சாப்பிடவேண்டுமே யன்றி நமது நாவிற்கு இனிமையாக இருப்பதாக உணவை உட்கொள்ளவில்லை என்ற உணர்ச்சியை நாம் வளர்த்துவரவேண்டும். நாம் சுகத்திற்காகக் காற்றை உட்கொள்ளவில்லை. மூச்சு விடுவதற்காகவே காற்றை உட்கொள்ளுகின்றோம். நாம் நம்முடைய தாகத்தைப் போக்குவதற்காகத் தண்ணீரைக் குடிக்கின்றோம். அவ்வாறே நம்முடைய பசியைப் போக்கிக் கொள்ளுவதற்காக நாம் உணவை உட்கொள்ளவேண்டும். ஆனால் குழந்தைப்பருவம் முதல் நாம் வேறு வழியில் பழக்கப்பட் டிருக்கின்றோம். நம்மைப் போஷிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் நமது பெற்றோர்கள் நமக்கு எல்லாவிதமான உருசியும் ஏற்படும்படி நமது நாக்கைப் பழக்கி விடுகிறார்கள். ஆனால் தங்களுக்கு நம்மீதுள்ள பிரீதியை அதிகமாய்க் காட்டவேண்டுமென்ற நோக்கத்துடனேயே அவர்கள் நமது சுவையுணர்ச்சியை வளர்த்து வருகின்றார்கள். இதனால் நாம் கெட்டுப்போகின்றோம். ஆதலால் நாம் நமது வளர்ப்பு முறையால் நம்மில் தோன்றியுள்ள கேடுகளுக்கு விரோதமாகப் போராடவேண்டி யிருக்கிறது.

### மந்திரங்களின் மகிமை.

13. சிற்றின்பப் பிரீதியை அடக்கும் சக்தியைப் பெருவதற்கு ஒரு சிறந்தவழி இருக்கின்றது. அதாவது தெய்வாம்சம் வாய்ந்த "ராம" மந்திரத்தையோ அன்றி வேறுவிதமான மந்திரங்களையோ ஜபிப்பதுதான். துவாதச மந்திரமான, "ஓம் நமோ பகவதே வாசுதேவாய" என்பதும் ராமஜெபத்தின் பலனையே அளிக்கும். ஒவ்வொருவரும் தமது மனதிற்குகந்த மந்திரத்தைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும். நான் ராம நாமத்தை ஜபிக்கும்படி கூறிய காரண மென்னவெனில், குழந்தைப்பருவ

மூதற்கொண்டே அம் மந்திரத்தை ஜபிக்கும்படி என்னைப் பழக்கிவிட்டார்கள். அந்த ஜெபத்தின் பலனாக எனக்கு எப்பொழுதும் பல மேற்பட்டிருக்கின்றது. ஒருவர் எந்த மந்திரத்தைத் தெரிந்தெடுத்தபோதிலும் சரி, அவர் அதனை ஜெபிக்கும்பொழுது அவரது மனமானது அதில் லயப்பட்டிருக்கவேண்டும். பூரண நம்பிக்கைகொண்ட மனத்தினராய் அந்த மந்திரத்தை நாம் ஜெபிக்கவேண்டும். அப்படிச் செய்யும்பொழுது நமது மனமானது வேறு எண்ணங்களால் எவ்வளவு குறைக்கப்பட்டபோதிலும் நாம் இறுதியில் வெற்றியுறுவோம் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. மந்திரமானது ஒருவருடைய வாழ்க்கையைத் தூய்மைப்படுத்தும். அது எல்லாவிதமான துன்பங்களையும் போக்கும். அம்மாதிரி புனிதமான மந்திரங்களை நாம் இகலோகார்த்தமான நன்மைகளைப் பெறுவதற்காக எப்பொழுதும் உபயோகிக்கக்கூடாது. அவற்றை ஒழுக்கத்தைப் பாதுகாப்பதற்காக மாத்திரம் உபயோகித்து வந்தால் அதனால் ஆச்சரியகரமான பலன்கள் ஏற்படும். கிளிப்பிள்ளை சொல்லுவதுபோன்று சும்மா வாயளவில் மந்திரத்தை ஜெபிப்பதில் யாதொரு பலனுமேற்படாது. ஆத்மபூர்வமாக மந்திரங்களை ஜெபிக்கவேண்டும். கிளியானது ஆத்மபூர்வமாக நாம் சொல்லிக்கொடுக்கும் மந்திரத்தை ஜெபிக்கவில்லை. ஆனால் கிராமபோன் யந்திரம் போன்று சொன்னதைச் சொல்லுகிறது. நமது கெட்ட எண்ணங்களைப் போக்குவதற்காக மந்திரங்களை ஜெபிக்கவேண்டும். அம்மாதிரி செய்யும் சக்தி அந்த மந்திரத்திற்கு இருப்பதாக நாம் பூரண நம்பிக்கைகொண்டு அதனை ஜெபிக்கவேண்டும்.

---

குறிப்பு:—நேயர்களே! நமது மகாத்மா காந்தியடிகள் திருவாய் மலர்ந்தருளிய மேற்கண்ட அரிய வியாசத்திலுள்ள முக்கியமான விஷயங்களின் கருத்துகள் யாவர்க்கும் நன்கு விளங்குவதற்காகச் சில குறிப்புகளை யீண்டு கூறுவது இதை வாசிப்போர்க்கு பயன்றருமெனக் கருதியே இதை வரையலாயினோம்.

1-வது பத்தியிலுள்ள கடைசி இரண்டு வாக்கியங்களும் கவனிக்கத்தக்கவை. கடவுள் நமக்குள்ளாகவே யிருக்கின்றார் என்ற சங்கதி பெரும்பாலும் யாவர்க்குமே தெரியும். யாவரும் ஒவ்வொரு சமயம் அதை வெளியிடுவதுண்டு. "நாம் என்றைக்காயினும் இறந்துபோவோம். அதுவும் எந்த நிமிடமோ தெரியாது" என்ற உண்மையை ஒவ்வொருவரும் அறிந்திருந்தும், மறுவிநாடி அதை மறந்து சாசுவதமாகவே யிருக்கப்போகிறவர்கள்போன்று அனேக காரியங்களைச் செய்கிறார்களேயன்றி, மரணம் வருமே யென்ற ஏக்கங்கொண்டு அதை யொழிக்க வழி தேடுகிறார்களில்லை. அவ்வாறே கடவுள் நமக்குள் இருக்கிறார் என்பதையும் மறந்து தான் மட்டுமே யிருப்பதுபோலும், தான் செய்யும் காரியம் ஒருவர்க்கும் தெரியாதுபோலும் எண்ணிக்கொண்டு எத்தகைய தீய காரியங்களையும் செய்கிறார்கள்.

"பகவான் சதா நமக்குள்ளாகவே யிருக்கிறார். அவரையன்றி நமக்கு வேறு இருப்பிடமில்லை. நாம் சிந்திக்கும் சிந்தனையின் கூடவே அவர் சாட்சியாயிருந்து யாவற்றையு முணர்கிறார்" என்ற உணர்ச்சி உறுதியாக நிலைத்துவிட்டால் 'நான்' என்ற அகங்காரம் கொஞ்சங் கொஞ்சமாய்க் கரையத்தொடங்கும். அது தொடங்கவே தன் செயலால் ஒன்றும் ஆவதில்லை யென்ற உண்மை அனுபவமாய் விளங்கும். ஆகையால் மேற்கண்ட உணர்ச்சி உறுதியாய் நிலைத்ததுமுதல் தீய சிந்தனைகள் ஒன்றேனும் தலை காட்டாது. அந்த உணர்ச்சி முடிவில் "சாக்ஷியே ஆன்மாவாகிற நாம்" என்ற ஆன்மஞானத்தை யடையச்செய்யும். அப்போது அவன் மாயையாகிய அஞ்ஞானத்தினின்றும் விடுதலை யடைந்தவனாகிறான்.

2-ம் பத்தியில் கூறப்பட்ட விஷயத்தால் நமது மகாத்மா தமது சொந்த அனுபவத்தையே வெளியிடுகிறார் என்று அறியலாகும். அனுபவிகளுக்கே அதிலுள்ள கஷ்டமும், காரியசித்திக்கு வேண்டிய உளவுகளும் தெரியும். சாதாரணமாய் "மனம் என்ன! நாம் நில்லென்றால் நிற்கிறது" என்று வாயால் கூறுகிறவர்கள் எள்ளளவும் மனதை யடக்க முயன்றவர்களேயல்ல. முயன்றிருந்தால் அதன் கஷ்டத்தை யுணர்ந்து அப்படி யலட்சியமாகக் கூறமாட்டார்கள். ஆனால் நம் மகாத்மா கூறுவதைக் கவனத்தோடு வாசித்தால் பல உண்மைகளை யறியலாகும். இதற்காகவே இதைப்பற்றி விவரித்துக் கூறலாயிற்று.

3-ம் பத்தி. இதில் மகாத்மா கூறுவது பிரமசரியத்தின் மிக்க உயர்வான பொருளாகும். எப்போதும் "பிரம்மத்தை யறிவது" என்பதே பிரமசரியம் என்பதன் பொருளாகக் கருதப்படுவதாயின், அந்த ஆசிரமத்திலேயே எல்லா விவகாரங்களும் முடிந்து முத்தி கைகூடிவிடும். ஏனெனில் பிரம்மசாக்ஷாத்கார மடைந்தபின் வேறு தொழிலில்லையாதலின். அப்போது அதனினும் மேல் நிலைகள் வேண்டப்படா. ஆசை யடியோடொழிந்தா லன்றி மனம் சொரூபநாசம் அதாவது உருவநாசமடையாது. அதாவது ஒடுங்காது. ஏனெனின் இச்சையே மனதின் சொரூபமாதலின். இன்னும் உலக சுகபோகங்களில் சற்றேனும் ஈடுபடாத யௌவன வயதுடைய பிரம்மசாரி அடியோடு ஆசையை நீக்குவதென்பது பெரும்பாலும் ஆகாதகாரியமே எனலாம். உலக இன்பங்களை அனுபவித்த மகாத்மா தாமே அந்நிலையை யடையவில்லை யென்று பின்னால் 4-ம் பத்தியில் கூறுவதே இதற்கு அத்தாட்சியாகும்.

ஆகையால் சாதாரணமாய்ப் பிரம்மசரியம் என்றால் சாத்திர ஆராய்ச்சி செய்து மனவாக்குக் காயங்களால் சிற்றின்பப் பிரியத்தை யடக்கி, பல ஸ்தலங்களைத் தரிசித்து யோகாப்பியாசம் முதலிய செய்தலேயாம். இதைப்பற்றி மகாத்மா பின்னால் 10-வது பத்தியில் கூறியிருக்கிறார்.

(தொடரும்)

# பகவத்கீதை வசனம்.

(9-ம் தொகுதி 472-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஈண்டு பகவான் சகுண உபாசனை நிர்க்குண உபாசனை யிரண்டிற்கு முள்ள பேதத்தைக கூறியருளினார். இரண்டு உபாசகர்களும் தம்மையே யடைவர் என்று கூறியதனால் இருவர்க்கும் பலன் ஒன்றே யென்றாயிற்று. ஆனால் நிர்க்குண உபாசகர்க்கு வருத்தம் அதிகம் என்றும் சகுண உபாசகர்க்கு அதனினுங் குறைந்த வருத்தம் என்றும் தெரிகிறது. இப்போது இரண்டு மார்க்கங்களுக்கும் பலன் ஒன்றாகவே யிருக்கிறவரையில் குறைந்த வருத்தமுள்ள மார்க்கத்தையே யேன் கைக்கொள்ளலாகாது? அதிக வருத்தமான மார்க்கத்தில் செல்வோரை யேன் அதிகமாகச் சிறப்பிக்க வேண்டும்? என்ற ஐயங்கள் எழலாகும்.

அதிகாரிகளின் தன்மையால் இரண்டு மார்க்கங்களும் வேண்டற்பாலனவே. ஏனெனில் தீவிரதர, தீவிர அதிகாரிகளே நிர்க்குண உபாசனைக் குரியோர். ஏனெனில் அவர்கள் சூக்கும அறிவுடையோர் ஆதலின் தேகம் தனக்கன்னியம் என்பதை எளிதினுணர்ந்து, மனதையும் ஆன்மாவையும் வேறு பிரித்தறிந்து பிரம்ம சாக்ஷாத்கார நிலைமை யடைவார்கள். மந்தம் மந்ததரமுடைய அதிகாரிகள் வேறு பிரித்தறியும் சக்தியுடையவர்களல்லவாதலின் அவர்கள் சகுண உபாசனைக்கே யுரியவர். இவர்கள் சகுண உபாசனையால்தான் அலையும் மனதைக் கொஞ்சம் கொஞ்சமாய் ஒடுக்கவேண்டும். இவர்கள் தாங்கள் துதிக்கும் சொரூபத்தினிடம் பக்தி முதிர்ந்து அப்பக்தி அனன்னிய பக்தியாய் மாறியபின் ஞாதுரு ஞேயங்களற்று, பிறகே ஞான மாத்திரமாய்ச் சேஷித்தலாகிய ஆன்மசாக்ஷாத்கார மெய்தி பிரம்மான்ம ஐக்கிய நிலையை யடைவார்கள்.

இந்த இருவரில் சகுண உபாசகர்கள் தம் உபாசனாமூர்த்தமாகிய சொரூபத்தினிடத்தில் மனம் நிலைத்து நிற்கும்படிச் செய்யவேண்டிய கஷ்டத்தை யுடையவர்கள். இவர்களுக்கு வாக்கும் காயமும் உதவியாயிருக்கின்றன. எவ்வாறெனின், வாக்குமந்திரத்தை யுச்சரிப்பதாலும், காயம் அர்ச்சனையாதி கிரியைகளைச் செய்வதாலும் மனதை யலையவிடாது காக்கின்றன. ஆதலின் இவர்கள் வருத்தம் குறைவானதே.

நிர்க்குண உபாசகரோ தேகம் இந்திரியங்கள் கரணங்கள் யாவற்றையும் அடியோடு நிக்கிரகம் செய்து சகல கேவலங்கள் தாக்காத நிலையை யடையவேண்டி யிருத்தலால் இவர்கள் கஷ்டம் மிக்க அதிகமானதே. இவர்கள் நேரே பிரமத்தை யடைகிறார்களாதலின் பகவான் "அத்தகையோன் நானே" என்றார். சாதாரணமாய் ஒருவன் யாரும் செய்யமுடியாத காரியத்தைச் செய்துவிட்டதாய்த் தன்னைப் புகழ்ந்துகொள்ளும்போது "இவன் என்ன பிரம்மவித்தை கண்டுபிடித்துவிட்டானோ" என்று உலகோர் கூறுவதே இதனுண்மையை விளக்குகிறது.

சகுண உபாசனையே மனோலயம் பெறுதற்கு ஓர் சுலபமான மார்க்கமாகும். எவ்வாறெனின் மனம் எப்போதும் நாமரூபங்களிலேயே நாட்டமுடையது. நாமரூப நாட்டத்தை விட்டாலன்றி ஆன்ம சொரூபம் தோன்றாது; மனமோ நாமரூப நாட்டத்தை யெளிதில் விடும் சுபாவமுடையதல்ல. சகுணோபாசகன் அது செல்லும் வழியே யதைவிட்டுப் பிறகு சுலபமாய் அடக்கிவிடலாகும். சதா ஒரு விஷயத்தை விட்டு ஒரு விஷயத்தில் பாய்ந்தோடி அலைந்துகொண்டே யிருக்கும் மனம், சகுணோபாசனையின் மூலமாய் முதலில் குறித்த ஒரு நாட்டத்திலேயே நிலைத்து நிற்கப் பழகி நம் வயப்படுகிறது. பிறகு அதை அடக்குவது சுலபமாகும். ஆகையால்

பெரும்பாலான அதிகாரிகளுக்குச் சகுணோபாசனையே பயனளிக்கத்தக்க தாகும். சகுணோபாசகன் பக்தியொன்றையே நாட்டத்தில் கொண்டு அதை யப்பியசிக்கத் தொடங்குவானேல் ஞானமடைதற்கு வேண்டிய எல்லாச் சாதனங்களும் ஈசுவரனருளால் தானே கைகூடும். இம்மார்க்கத்தால் அரிய சித்திகளையும் முத்தியையும் பெற்ற மகான்கள் எண்ணிறந்தோர்.]

(என் பக்தர் எனது அருளால் முத்தியடைவார் என்று பகவான் அருளிச் செய்கிறார்.)

ஏ பார்த்த ! யாவர் சகல கர்மங்களையும் என்னிடத்தே அர்ப்பணம் செய்து தமது சித்தத்தை என்பால் நிலைக்கச் செய்வார்களோ அவர்களை இறப்பும் பிறப்புமாகிய துக்கசாகரத்தினின்றுங் கரையேற்றிச் சிறிதுகாலத்தில் அவர்களை முத்தியடையச் செய்வேன்.

நீ உண்மையாகவே உனது சித்தத்தைப் பூரணமாக என்னிடத்தில் வைப்பாயாயின், என்னில் அன்னியமாக விராது அபேதமாய்க் கலந்திருப்பதற்குச் சற்றும் சந்தேகமேயில்லை. அவ்வாறு சகுணப் பிரம்மமாகிய என்னிடத்தில் சித்தத்தை நிலைநிறுத்த முடியாதாயின், அதற்குரிய அப்பியாசத்தைச் செய்வாயாக. அதையும் செய்ய முடியாதாயின் நீ திரிகரணங்களாற் செய்யும் கர்மங்களை யென்பொருட்டாகச் செய்வாய். அப்படிச் செய்யவும் முடியாதாயின் பலனை யிச்சியாமலே கர்மங்களைச் செய்வாயாக.

அப்பியாசத்திலும் ஞானமே சிரேஷ்டமாம். அந்த ஞானத்தினும் உண்மையான தியானம் சிறந்ததாம். அத்தியானத்திலும் கர்மபலனைத் தியாகம் செய்தல் மேன்மையானதாகும். அதன் பின்னர் சித்த சாந்தியுண்டாகுமாதலின்.

ஈண்டு அப்பியாசம் என்பது சிரவணாதிகளைக் குறிக்கும். ஞானம் என்பது ஆன்ம நிச்சயமாகிய பரோக்ஷஞானம் சிரவணமனனஞானம் நிதித்தியாசனவாயிலாக ஆன்மசாக்ஷாத்காரஞானத்தை யளிக்கும். நிதித்தியாசனரூபமான தியானமோ ஈசுவரனது அருளைப் பெறச்செய்வதால் நேரே ஆன்ம சாக்ஷாத்கார ஞானத்தை யளிக்கும். ஆதலின் படிப்படியாய் ஒன்றினொன்று மேலானதென்றார்.

ஞானத்தினும் தியானம் மேற்கண்ட காரணத்தால் சிரேஷ்டமாயினும், கர்மபலத் தியாகம் அத்தியானத்தினும் சிரேட்டமாம். ஏனெனில், கர்மபலனைத் தியாகம் செய்தால் இச்சை யொழிந்ததாகும். அதன்பின் சித்தசுத்திவாயிலாய் எளிதில் ஆத்மஞானம் கைகூடும்.]

ஏ பர்க்குண ! சர அசரமாகிய உயிர்களிடத்து (ஓரறிவுமுதல் ஆறறிவு வரையிலுள்ள பிராணிகள்) அன்புடையவனாய், இன்ப துன்பங்கள் நான் எனது என்றவைகளில் ஒன்றையுமறியாதவனாய் (சுக துக்கங்களில் சம திருட்டியுடையவனாய், அகங்கார மமகாரங்களற்றவனாய்), எந்தப் பதார்த்தங்களிலும் இச்சை வெறுப்பில்லாதவனாய், சித்ததத்தை ஒரு வழியில் நிறுத்தியவனாய், ஆன்மாவின்கண் திட நிச்சயமும் கருணையும் உடையவனாய், புத்தியை விஷயங்களிற் செல்லவொட்டாது தடுத்து என்னிடத்தே அர்ப்பணஞ் செய்திருக்கும் யோகியே யெனக்கு அத்தியந்தப் பிரியன்:

ஒரு பொருளிலும் ஆசையின்றி இந்திரியங்களின் வழியில்தான் செல்லாது அவற்றைத் தன்வசமாக்கி, ஒருவர் செய்யும் உபகார அபகாரங்களில்

சம மனமுடையவனும், நற்கரும துர்க்கருமங்களைப் பரித்தியாகம்செய்து, தேகத்திற்குச் சுகமுண்டாயினும் வேதனையுண்டாயினும் மகிழ்தல் வாடுதல் இன்றி, பிரியவஸ்து கிடைத்தால் சந்தோஷமடைதலும் அப்பிரியவஸ்து கிடைத்தால் துக்கமடைதலும் இன்றி, இழந்த பொருட்குத் துக்கியாது வரும் பொருட்கு இச்சை வையாது, சத்துரு மித்துரு என்ற பேதம் வையாமல், மானம் அவமானம், இன்பம் துன்பம், சீதம் உஷ்ணம், துதி நிந்தை இவற்றில் சம சித்தமுடையவனும், தான் வசிப்பது இன்ன விடமென்று ஒன்றைக் குறித்துக்கொள்ளாதவனுய்ச் சஞ்சரிக்கும் யோகியே எனக்கு அத்தியந்தப் பிரியனுவன்.

தாம் அறிவித்தாலன்றி ஒருவராலும் அறிதற்கரிய பகவான் பார்த்தனைநோக்கி, “ஏ அர்ச்சுன! முயற்சிசெய்து அடையத்தக்கதும், அடைந்தோரைச் சம்சார துக்கத்தினின்றும் விடுவித்து முத்தியிற் சேர்க்கக்கூடியதுமான பொருளை நான் அருளிச்செய்தபடியே சுபாவமாகப் பொருந்தும் வண்ணம் அறிந்து கொள்கின்றவர்களுக்கு நான் மிக்க பிரியனுக விருக்கின்றேன்” என்று அருளிச் செய்தார்.

12-வது அத்தியாயம் முற்றிற்று.

(தொடரும்.) சீடன்.



## ஒரு வேண்டுகோள்.

எனது அன்பார்ந்த “ஆனந்தனின்” நண்பர்களாகிய சகோதர சகோதரிகளே!

இப்பெரும் புகழ்படைத்த “பரத” கண்டத்தினது ஓர் பாகமாகிய தேனினும் தித்திக்கும் நம் “தமிழ்” நாட்டின்கண், “தமிழ்” மொழியில், வெளியாகும் பத்திரிகைகள் மிகச் சொற்பமென்றே சொல்லவேண்டும்.

இன்னுள்வரை எத்தனையோ பத்திரிகைகள் தோன்றி மறைந்தன. இன்னும் தோன்றிக்கொண்டும் மறைந்துகொண்டு மிருக்கின்றன.

ஏன் மறைந்துபோகின்றன? ஆதரிப்பாரில்லாமல் என்று சொல்வது மிகையாகாது.

பத்திரிகைகள் நன்ருக நடப்பது, அப்பத்திரிகையை யாதரிக்கும் சந்தாதாரர்களாகிய அன்பர்களைப் பொருத்ததாகும்.

சில பத்திரிகைகள் ஜாதிப்பிளவுகளை யுண்டுபண்ணி சண்டைபோடுவதிலேயே தனது வாழ்நாளை வீண் நாளாக்கி விடுகின்றன.

அந்தோ ஜாதிபேதம் ஆதிகாலத்தில் நன்மையையே யளித்துவந்தாலும் இக்காலத்தில் அதனுல் கெடுதிகளுண்டாவதால் கூடியவரையில் அப்பேதத்தைக் குறைத்து யாவரும் சம சகோதரத்வபாவமாய் ஒற்றுமையடையவேண்டுமென்று அறிவாளிகள் பாடுபடும் இக்காலத்தில், சில பத்திரிகைகள் தங்கள் ஜாதியின் உயர்வைத் தாபித்து மற்றொரு ஜாதியைத் தாழ்மைப்படுத்துவதையே நோக்கமாகக்கொண் டிருக்கின்றன. அவற்றில் அவர்கள் ஜாதிசம்பந்தமான விஷயங்களும் அவர்கள் ஜாதி உயர்வு என்பதற்கு வேண்டிய ஆதாரங்களுமே நிறம்பியிருக்கின்றனவன்றி பொதுவாய் யாவர்க்கும் பயன்படத்தக்க விஷயங்களைக் காண்பது அரிதே.

மற்றும் சிலவோ பிறமத தூஷணையையும் மதச் சச்சரவையுமே தனது ஆபரணமாகக்கொண்டு நமனுக்கு நாளை எண்ணுகின்றன. இத்தகைய பத்திரிகைகளினால் தேசத்திற்கு யாது பயன்? "எத்தால் வாழலாம்? ஒத்தால் வாழலாம்" என்னும் நீதிவாக்கியத்தை இவை மறந்தன போலும். இவைபோக,

சமரசத்துடன், சர்வதேச சர்வமத சர்வ ஜனங்களும் ஒற்றுமையுடன் இன்பமாக வாழ எண்ணங்கொண்டு அன்புடன் கூடிய ஆனந்தத்தை யளிக்கும் பத்திரிகைகள் மிகச் சொற்பத்திலும் சொற்பமென்றேசொல்ல வேண்டும். ஆனால் அப்பத்திரிகைகளை ஆதரிக்கும் அன்பர்கள் அதனினும் சொற்பமென்றே நினைக்கவேண்டி யிருக்கின்றது.

அத்தகைய பத்திரிகைகளின் நடுவே தவழ்ந்து விளையாடும் பாலகனும் நமது "ஆனந்தனும்" ஒன்றுவன்.

பத்து வயது இளங்குமாரனும் நமது "ஆனந்தனை" இதுகாறும் அன்புடன் ஆதரித்து வந்ததுபோல இன்னும் ஆதரித்து வருமாறு எனதன்புள்ள (சந்தாநேயர்களாகிய) சகோதர சகோதரிகளை கேட்டுக்கொள்ளுகின்றேன்.

சில நண்பர்கள் வருட முடிவில் நமது ஆனந்தனுக்கு அளிக்கும் சொற்பச் சந்தாவாகிய ஒரு ரூபாயை (அதாவது இரண்டு தினத்திற்கு ஒரு தம்பிடி) அனுப்பாமலும், தனது விருப்பத்தைத் தெரிவிக்காமலும், பிறகு வி-பி. வந்தால் திருப்பியும் விடுகின்றனர். நாம் இம்மனித ஜன்மத்தை எதற்காக எடுத்துள்ளோம், பிறருக்கு உபகாரம் செய்வதற்கேயன்றோ "பரோப காரார்த்த மிதம் சரீரம்" "பிறருக்கு உபகாரம் செய்வதின் பொருட்டே இச்சரீரம் அளிக்கப்பட்டுள்ளது."

"பிறருக்கு உபகாரம் செய்யவேண்டும், அவ்வாறு உபகாரம் செய்பவரைத் தடுக்காமலிருக்கவேண்டும். இதுகளைவிட அபகாரம் செய்யாமலிருப்பதே மேல்" என்று ஒருவர் கூறியுள்ளார்.

நாம் ஒவ்வொருவரும் நமதானந்தனை யாதரிப்பதுடன் நமது நண்பர்களையும் ஆதரிக்குமாறு செய்யவேண்டும். எல்லாம்வல்ல இறைவன் நல்லருள்பாலிப்பாராக.

மாந்தை-சா. கிருஷ்ணய்யன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(9-ம் தொகுதி 478-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 6-வது அத்தியாயம்.

மனோகரன் சென்றபின் ஆனந்தலிங் தன் அறைக்குள் நுழைந்துக் கதவைப் பூட்டிக்கொண்டு இரண்டுமணி நேரம் வெளி வரவில்லை.

ஆனந்தலிங் மிக்க ஆழ்ந்த யோசனையும் தைரியமும் துணிகரமும் முன்யோசனையுமுடையவன். இப்போது அவன் மனதில் தோன்றியிருந்த யோசனை மிக்க அபூர்வமானது. அந்த யோசனை அனேகர் மனதில் உதிக்கலாம். ஆனால் பத்தாயிரத்தில் ஒருவன்கூட அப்படி நடக்கத் துணியமாட்டான். அப்படித் துணிந்தவர்களில் பத்தாயிரத்தில் ஒருவன்கூட அந்த எண்ணப்படி நடக்க முடிவது அசாத்தியம். முன்னாள் ஆனந்தலிங் சவங்கள் சோதனைசெய்ய வைக்கப்பட்டிருக்கும் கட்டிடத்திற்குச் சென்று ஒரு மணிநேரம் அங்கு கழித்தான்.

மாலை சுமார் ஐந்துமணியிருக்கும். அச்சமயம் ஆனந்தலிங்கின் அறையிலிருந்து ஒருவன் வெளியே புறப்பட்டான். அவன் சோதனைக்காக சவங்கள் வைக்கப்பட்டிருக்கும் ஸ்தலத்தை நோக்கிப் புறப்பட்டான்.

வழியில் இன்னொருவன் அவனைச் சந்தித்து "ஆ! அச்சுதன்! எங்கே இரண்டு மூன்று நாட்களாய் உன்னைக் காணவில்லையே, சங்கரன்கூட உன்னைப்பற்றி யென்னைக் கேட்டான்" என்றான்.

அம்மனிதன்:—"எனக்குச் சுகமில்லை; அதனால் வெளியில் வரவில்லை" என்றான்.

பிறகு அம்மனிதன் இரவு 7 மணிக்குச் சவங்கள் இருக்குமிடத்திற்குச் சென்று கதவைத் தட்டினான். இவன் வழியில் "சரி ஒரு சோதனை திருப்தியாய் முடிந்தது. இதனால் அச்சுதன் இறந்த சங்கதி அவன் கூட்டாளிகளுக்குக்கூட இன்னம் தெரியாது என்று தெரிகிறது. சரி இன்னொரு சோதனையும் பார்த்துவிட்டுப் பிறகு பார்ப்போம்" என்று தனக்குள் கூறிக்கொண்டான்.

அவன் கதவைத் தட்டினதே காவலன் வந்து கதவைத் திறந்தான். வந்த மனிதன் உடனே உள்ளே நுழைந்து எரியும் தீபத்திற்கு முன் நின்றான். காவலன் அவன் முகத்தைப் பார்த்ததே கண்கள் கரகரவென்று சுழன்று, முகம் வெளுத்து தேகம் படபடவென்று உதரலெடுத்துக் கொண்டு, "கடவுளே! நீ உயிருள்ள மனிதனோ அல்லது இங்கு இறந்து சவமாயிருக்கும் மனிதனுடைய ஆவேசமோ? என்று நடுங்கிக்கொண்டே யெட்ட நின்றான்.

வந்தமனிதன்:—"நான் கொல்லப்பட்டு இங்கு சவமாய்க் கிடக்கும் அச்சுதன் என்றவனுடைய சவத்தைக் காணவேண்டி வந்தேன்" என்றான்.

காவலன்:—"ஆ! இப்போது நீ ஆவேசமல்லவென்று தெரிந்துகொண்டேன். நீயும் இறந்திருப்பவனும் இரட்டைப் பிள்ளைகள். இனி செத்தவன் நீ யென்றும் அவனென்றும் ஒருவராலும் கூறமுடியாது" என்றான்.

அதற்குள் இருவரும் சவங்களிருக்கு மிடத்திற்குச் சென்று நின்றார்கள். வந்தமனிதன் அச்சுதன் சவத்தைக் கவனமாய்ப் பார்ப்பதைக் காவலன் மிக்க அக்கரையோடு பார்த்துக்கொண்டே நின்றான். அப்போது அவனுக்கு உதித்த ஒரு யோசனையால் அவனுடைய கலவரமும் திகிலும் சற்று தணிந்தன. இறந்து தன்முன் சவமாயிருக்கும் லாயர் குமஸ்தாவாகிய அச்சுதனும் அச்சவத்தைக் காணவந்து தன் எதிரில் நிற்பவனும் இரட்டையாய்ப் பிறந்த சகோதரர்கள் என்று தீர்மானித்துக்கொண்டு அம்மனிதனை நோக்கி "இதோ பார்த்தாயா உன் இரட்டைச் சகோதரன். நீ யென்ன சுத்தக் கல்மன முடையவனாயிருக்கிறாயே. உன் சொந்த சகோதரனுடைய சவத்தின் முன் நிற்கிறாய். உன் முகத்தில் எள்ளளவேனும் விசனமென்பதே தோன்றவில்லையே" என்றான்.

இவ்வாறு கூறும் இக்காவலன் நமது ஆனந்தலிங்குக்கு நன்றாய் அறிமுகமானவன் என்பதை இதை வாசிக்கும் நண்பர்கள் மனதில் வைக்க வேண்டும்.

வந்திருக்கும் மனிதன் இனியேனும் மனங்கரைந்து துயரத்தை வெளியிடுவான் என்று காவலன் எதிர்பார்த்தான். அம்மனிதனோ சற்றும் முகவாட்டமேனும் அடையாமல் சாந்தத்தோடும் நிதானத்தோடும் காவலனை நோக்கி,

"எனக்குச் சகோதரனே கிடையாது. இம் மனிதனை நான் இது காறும் கண்டதேயில்லை. இவன் என்னைப்போலவே யிருக்கிறன் என்று யாவரும் ஆச்சரியப்படுவதை யறிந்து பார்க்கலாமென்று வந்தேன்" என்றான்.

காவலன்:—"நீ பரமசண்டாளன். சொந்த சகோதரனை மனம் வந்து அனு தைப் பிணமாய் நகர சங்கத்தார் புதைக்கும்படி விடுகிறாயல்லவா. நீ தப்பித்துக் கொள்ளலாமென்று நினையாதே. உன்னை நான் விட மாட்டேன். எஜமானிடம் கூறுகின்றேன்" என்றான்.

அம்மனிதன் புன்னகையோடு அவனருகிற் சென்றான். காவலன் சட்டென்று அலறி பின்சென்று கூச்சலிடப்போனான்.

அதற்குள் அம்மனிதன் வேறு குரலாய் "கூச்சலிடாதே! கந்தசாமி! நான் சொல்வதைக் கேள். முதலாவது நான் யாரென்று உனக்குத் தெரி கிறதா பார்" என்று கூறிக்கொண்டே, தன் தலையணியையும் பொய்த் தாடி மீசைகளையும் கழற்றினான்.

மாறுகுரலைக் கேட்டபோதே காவலன் திடுக்கிட்டுவிட்டு பிறகு தன் பெயரைக் கூறக்கேட்டு மிக்க ஆச்சரியமடைந்து, சற்றுநேரம் நிதான மாய்ப் பார்த்து சொல்லொணு வியப்பாலும் கலவரத்தாலும் வாய்குழறிக் கொண்டே "நீ...நீ...துப்பறிபவன்...ஆனந்தஸிங்" என்றான்.

ஆனந்தஸிங்:—"ஆம்" என்றான்.

காவலன் அதன்பின் பயம் நீங்கி, "ஆனந்தஸிங்! அடடா! எவ்வளவு பயத்தையும் கலவரத்தையும் உண்டாக்கிவிட்டாய்! உன்னைப்போல் ஆச் சரியமான மனிதனை நான் எங்கும் கண்டதில்லை. பட்டப்பகலில் செத் தவன் மறுபடி நடந்து வருகிறானென்றே யாவரும் நம்பிக் கொள்வார் கள்" என்றான்.

ஆனந்தஸிங் "அப்படி நம்பச் செய்யவேண்டுமென்பதே என் கருத் தும். செத்தவன் யார் தெரியுமா?" என்றான். (தொடரும்.)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

# சந்தாநேயர்களுக்கு விசேஷ அறிவிப்பு.

சில சந்தாதாரர்கள் அன்னியரிடம் பணத்தைக் கொடுத்து நமக்கு அனுப்பச் செய்கிறார்கள். சிலவற்றில் சந்தா நெம்பர் குறிக்கப்பட்டிருக்கிறது, பெயர் முதலியவை வேறாகவிருக்கிறது. சிலவற்றில் நம்பரே குறிக்கப்படுவதில்லை. இவ்வாற்றால் பணம் அனுப்பியது யாருக்காகவென்று தெரியாமற் போவதால் அவர் களுக்கு வி.பி. இயற்கையாய் வந்துவிடலாகும். அத்தகையார் பின்னால் பணம் அனுப்பி விவரத்தைத் தெரிவித்தாலும், வி. பி. அனுப்ப நேர்ந்தது அவர்கள் குற்றத்தாலாதலின் அதனால் நேர் ந்த 3 அணு நஷ்டத்தை யவர்கள் செலுத்தவேண்டுமாய்க் கோரு கிறோம். பத்திராதிபர்.

## மழைபெய்யும் மரங்கள்.

ஆபிரிக்காக் கண்டத்தில் மேற்குக் கடலிற் கூட்டங் கூட்டமான பல தீவுகளுண்டு. அத்தீவுகளிலொன்றில் நதி ஓடை நீர்வீழ்ச்சி முதலிய நீர் நிலைகள் கிடையா. ஆதலால் இத்தீவிலிருந்த பழைய குடிகள் கிணறுகளை வெட்டி இவற்றினின்றுந் தண்ணீர் எடுத்துக்கொண் டிருந்தார்கள். பின்பு கிணறு தவிர வேறு தண்ணீர் கிடைப்பதற்கு வேறுவகை மார்க்கமில்லாமலும், அக்கிணறுகளுஞ் சில சமயங்களில் வரண்டுபோனமையாலும் இதிலிருந்த குடிகள் பிந்தினகாலத்தில் மடிந்துபோய்விட்டார்கள். அதனால் உயிர்ப்பிராணி எதையும் அங்கே காண்பது அரிதாயிருந்தது இப்படியிருந்தும் அதற்குப் பிந்தினகாலத்தில் கடவுளுடைய அதிக சாமர்த்தியச் செய்கையால் அத்தீவில் மழை மரங்கள் என்ற மகா விநோதமான பல விருட்சங்கள் உண்டாயினவாம். அவற்றுள் ஒவ்வொரு மரத்தினின்றும் மிகுதியான தண்ணீர் கிடைக்குமாம். இச்சூட்சுமம் மனிதருக்கு நெடுங்காலம்வரை தெரியாமலிருந்து பின்பு தெரிந்ததாம்; அவ்வாறு தெரிந்த பின் அத்தண்ணீரின் ஆதாரவைக்கொண்டு மறுபடியுஞ் சனங்கள் அத்தீவிற் குடியேறினார்களாம். இத்தீவிற்குச் சென்ற ஒவ்வொரு யாத்திரைக்காரர்களும் அம்மரங்களின் அதிசயத்தைப்பற்றித் தம்முடைய யாத்திரைச் சரித்திரங்களில் எழுதியிருக்கின்றனர். அவற்றில் ஒருவர் எழுதியிருப்பதை இதனடியில் விளக்குகிறோம். அதாவது :—

மழை மரங்கள் 40 அடி உயரமுதல் 48 அடி உயரம் வரையில் வளர்ந்திருக்கின்றன. இவற்றின் கிளைகள் முருங்கைக் கிளைகளைப்போல் வன்மையற்று மிக்க எளிதில் ஒடிந்துபோகின்றன. இவற்றின் இலைகளின் வெளிப்புறம் நீல நிறமாகவும், உட்புறம் வெண்ணிறமாகவும் இருக்கின்றன. இம்மரங்களில் புஷ்பமும் காயுங் கிடையா. பகற்காலத்தில் இவற்றின் இலைகள் உலர்ந்த சருகுபோற் காணப்படுகின்றன; இராப்பொழுதில் அந்த இலைகள் செழித்து அவற்றினின்றும் சுத்தத் தண்ணீர் வடிகின்றது. இராக்காலத்தில் ஒவ்வொரு மரத்தைச்சுற்றி மேகத்திரள்கள் காணப்படுகின்றன. இக்காட்சி அதிக ஆச்சரியத்தை உண்டுபண்ணுகிறது. எனினும் இவ்வாறு ஒவ்வொரு மரத்தையுஞ் சுற்றி மேகம் சூழ்ந்திருப்பது ஒரு பெரிய ஆச்சரியமன்று. இம்மரங்களில் மேற்கண்டபடி தண்ணீர் சுரப்பதுதான் பேராச்சரியமாயிருக்கிறது. இராக்காலமாகி மேகஞ் சூழ்ந்தவுடன் முதலில் மரங்களின் அடிப்பக்கத்தில் நீர் சுரக்கிறது; அங்கிருந்து அந்நீர் பல கிளைகளிலுஞ் சென்று இலைகளின் வழியாக வியர்வை நீர் போலத் துளிக்கின்றது. ஆனால் மேகத்திலிருந்து அந்நீர் உண்டாகவில்லை. மரத்துக்குள்ளிருந்தே வெளிப்படுகிறது. ஒவ்வொரு மரத்தினின்றும் ஒவ்வோர் இரவில் இவ்வளவு தண்ணீர்தான் வெளிப்படுகிறதென்று ஆராய்ச்சிக்காரர் திட்டமாய்க் கணக்கிட்டிருக்கிறார்கள். அவர்கள் கணக்கிட்டபடி ஒரு மரத்திலிருந்து ஓரிரவில் (20,000) இருபதினாயிரம் டன் நிறையுள்ள தண்ணீர் வெளிப்படுகிறதாம். இப்படிப்பட்ட மரங்கள் இத்தீவிற் பல இடங்களிலுங் காணப்படுகின்றன. இம்மரங்களினின்றும் உண்டாகும் நீரின் உதவியைக்கொண்டு 159 மைல் விஸ்தீரணம் வரையில் மனிதர்களும் மிருகங்களும் இப்பொழுது வாசஞ் செய்கின்றார்கள். மிருகங்களுஞ் சுகமாகச் சீவிக்கின்றன என்பதே. இத்தகைய மரங்கள் நம்முடைய இந்தியாவிலுமிருந்தால் மழையில்லாக் குறையால் உண்டாகும் பஞ்சம் நிவிர்த்தியாகுமன்றோ?

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## ரக்தாக்ஷிஸ்ரு ஆவணிமீ—கலியுகாதி 5026—சாலிவாகனம் 1847, பசலி 1334—கொல்லமாண்டு 1099-1100—ஹிஜரி 1343, இங்கிலீஷ் 1924ஸ்ரு ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ தி | ஆகஸ்டுமீ தி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | துதி41-35 | சதயம்20-3 | அ20-3மர | விஷ்ணுபதி புண்யகாலம் |
| 2 | 17 | ஞா | திரி39-45 | பூரட்19-25 | சி19-25அ | கரிநாள் |
| 3 | 18 | திங் | சது39-38 | உத்-20-30 | சித்60 | கிருஷியாரம்பம் |
| 4 | 19 | செவ் | பஞ்41-15 | ரேவதி23-15 | சித்60 | பிரயாணம் விலக்க |
| 5 | 20 | புத | சஷ்44-25 | அசு27-35 | ம27-35சி | |
| 6 | 21 | வியா | சப்49-0 | பரணி33-23 | சி33-23ம | சீதளாசப்தமி, மாவிளக்கு |
| 7 | 22 | வெ | அ54-30 | ※ கிரு40-13 | சி40-13ம | கோகுலாஷ்டமி, கிருஷ்ணாஷ்டமி, கிருத்திகை |
| 8 | 23 | சனி | நவ60 | ரோ47-30 | அ47-30சி | ஸ்ரீ கிருஷ்ணஜயந்தி |
| 9 | 24 | ஞா | நவ0-30 | மிரு54-45 | சித்60 | கரிநாள |
| 10 | 25 | திங் | தச6-15 | திரு60 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 11 | 26 | செவ் | ஏகா11-30 | திரு1-33 | மர1-33சி | சர்வ மத்வ ஏகாதசி |
| 12 | 27 | புத | து15-40 | புன7-20 | சித்60 | பிரதோஷம் |
| 13 | 28 | வியா | திர18-33 | பூச11-58 | அ11-58சி | மாசசிவராத்திரி |
| 14 | 29 | வெ | ச● 20-8 | ஆயி15-13 | மர60 | சர்வத்திர அமாவாசை |
| 15 | 30 | சனி | அ20-15 | மக17-5 | அ17-5சித் | மௌன விரதம் |
| 16 | 31 | ஞா | பிர18-53 | பூரட்17-35 | சி17-35அ | சந்திரதரிசனம் |
| 17 | 1 | திங் | துதி16-25 | உத்17-0 | சித்60 | சோடசோம விரதம் |
| 18 | 2 | செ | திரி13-3 | அஸ்15-25 | சித்60 | விநாயக சதுர்த்தி, சாம உபாகர்மம், அவமாகம் |
| 19 | 3 | புத | சது8-50 | சித்14-10 | சித்60 | |
| 20 | 4 | வியா | பஞ்4-5 சஷ்58-50 | சுவா10-5 | அ10-5சித் | |
| 21 | 5 | வெ | சப்53-25 | விசா6-40 | சித்60 | |
| 22 | 6 | சனி | அ47-48 | அனு3-5 கேட்59-25 | சித்60 | |
| 23 | 7 | ஞா | நவ42-10 | மூல55-40 | அ55-40சி | |
| 24 | 8 | திங் | தச36-40 | பூரா52-10 | மர60 | |
| 25 | 9 | செ | ஏ31-43 | உத்48-55 | அ48-55சி | |
| 26 | 10 | புத | து26-33 | திரு46-5 | சி46-5பிர | |
| 27 | 11 | வியா | தி22-20 | அவி44-0 | சி44-0மர | காதுகுத்த, உபநயனம |
| 28 | 12 | வெ | ச○ 18-48 | சத42-38 | சித்60 | பௌர்ணமி, கரிநாள் |
| 29 | 13 | சனி | பவு16-13 | பூர42-20 | ம42-20சி | பிரதமயஜுர் உபாகர்மம் |
| 30 | 14 | ஞா | பிர14-53 | உத்43-15 | அமி60 | மாளயபட்ச ஆரம்பம் |
| 31 | 15 | திங் | துதி14-48 | ரேவ45-28 | சித்60 | சர்வ முகூர்த்தம், யாத்திரைசெய்ய |

1924ஸ்ரு செப்டம்பர்மீ

| | | | |
|---|---|---|---|
| | | | சுக் |
| கே செ | 3௳ கன்-புத<br>6 ,, கட-ரா<br>6 ,, மக-கே<br>16 ,, கட-சுக் | | |
| | | | சூரி புத ராகு |
| | குரு | சனி | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.